இந்தியாவிலேயே மிக அதிகமாக விற்பனையாகும் மாத நாவல்

க்ரைம் நாவல்



பொங்கல் சிறப்பிதழ்

அதிக பக்கங்கள்

ரூ. 20

284

# விவேக்! இனி ஆட்டம் உன் கையில்!

புத்தம் புதிய நாவல்

உள்ளே...
க்ரைம் மன்னனின்
ஆன்மிகப் பேட்டி

## ராஜேஷ்குமார்

# விவேக்! இனி ஆட்டம் உன் கையில்!







ராஜேஷ்குமார்

இந்தியாவில் இப்போது ஓரளவு மழை பெய்து விவசாயம் நல்ல முறையில் நடப்பதற்குக் காரணம் வங்கக் கடலில் உருவாகும் புயல்கள்தான். தென் மேற்கு பருவமழையும் வடகிழக்கு பருவமழையும் சரியான அளவுக்குப் பெய்யாமல் ஏமாற்றிவிடும் போதெல்லாம் நமக்கு கை கொடுப்பது புயல்கள்தான். வங்கக்கடல் என்பது இந்து மகா சமுத்திரத்தின் ஒரு பகுதி. இதன் எல்லையாக மேற்கே இந்தியா, இலங்கை, வடக்கே வங்காள தேசம், கிழக்கே மியான்மர் நாடுகள் உள்ளன. வங்கக்கடலின் பரப்பளவு 1600 கிலோ மீட்டர் ஆகும். இதன் சராசரி ஆழம் 8500 அடி. மிக அதிக பட்ச ஆழம் 15000 அடி. 'சரி.....! கடலில் ஒரு புயல் எப்படி உருவாகிறது?' என்பதை இரண்டாவது அத்தியாயத்தின் ஆரம்பத்தில் பார்ப்போம்.



மும்பையின் 'கேட்வே ஆஃப் இண்டியா' வழக்கமான கூட்டத்தோடு அந்த மாலைவேளையில் மெள்ள மெள்ள மின்சார வெளிச்சத்தைக் கடன் வாங்கிக் கொண்டிருந்தது. எதிரே 'பிரம்மாண்டம்' என்று சொல்ல வைத்த தாஜ் ஹோட்டல். நூற்றுக் கணக்கில் புறாக்கள் ஒன்றாய் குபீரென்று எழுந்து மேலே பறப்பதும், பிறகு அதே வேகத்தில் தரையில் வந்து உட்காருவதுமாய் இருக்க, அதை ரசிக்கும் டூரிஸ்ட் கும்பல். மசாலா வாசனையோடு நகர்ந்து போகும் பானிபூரி தள்ளுவண்டிகள். மக்காச் சோளத்தை கரி அடுப்பில் சுட்டு அதன் மேல் மிளகாய்த்தூளைத் தடவி ''இதர் ஆவோ... கர்மி காவோ'' என்று கூவி விற்கும் பெண்கள். தொலைவில் படகுகளோடு தெரிந்த

அரையிட்டுக்கடல்.

பேவ்மெண்ட்டின் ஒரு ஓரத்தில் போடப்பட்டு இருந்த சிமெண்ட் பெஞ்சில் உட்கார்ந்து கடலைப் பார்த்துக் கொண்டிருந்த ரூபலா தன் இடதுகை விரல்களால் விவேக்கின் தோள்பட்டையை மெள்ள சுரண்டினாள்.

''என்னங்க!''

''சொல்லு.''

''லேசாய் பசிக்கிற மாதிரி இருக்கு.''

விவேக் ரூபலாவின் தலையில் குட்டினான். ''ஏன் பசிக்காது....! மத்தியானம் நீ லஞ்ச்சை சரியாவே சாப்பிடலை......''

''நம்ம ஊர் சாப்பாடு மாதிரி இல்லையே!''

''இதோ பார் ரூபி! இந்தியா நீ நினைக்கிறமாதிரி ஒரு நாடு கிடையாது. ஒரு உபகண்டம். இந்த உபகண்டத்தில் இருக்கிற ஒவ்வொரு மாநிலமும் ஒரு நாடு. அந்தவகையில் பார்க்கப் போனால் மும்பை இருக்கிற இந்த மஹாராஷ்ட்ரா மாநிலம் நமக்கு ஒரு அந்நிய தேசம் மாதிரி. இங்கே இருக்கிற ஜனங்களையே பாரு. குர்தா, பைஜாமா, தலையில கறுப்புத் தொப்பின்னு வித்தியாசமா இருக்காங்க. சாப்பாடும் அப்படித்தான் இருக்கும். கொஞ்சம் அட்ஜஸ்ட் பண்ணிக்க......''

''மும்பை வந்து ரெண்டுநாள்தான் ஆச்சு...... என்னமோ இருபதுநாள் இருந்த மாதிரி ஃபீலிங். இன்னும் எத்தனை நாள் இங்கேயிருந்து குப்பை கொட்டப் போறோம்!''

''இன்னும் முழுசா ரெண்டு வாரம் இருக்க வேண்டியிருக்கும். கேஸ் ஹிஸ்டரியே இப்பத்தான் கைக்கு வந்திருக்கு. படிச்சு பார்க்கவே முழுசா ஒரு நாள் வேணும் போலிருக்கு. மேலோட்டமாய் ஒரு பார்வை பார்த்தேன். மூளை 104 டிகிரி ஃபாரன்ஹீட் லெவலுக்கு சூடாயிடுச்சு...ஒரு மாத்திரை போட்டு டீ குடிச்ச பின்னாடிதான் நான் நார்மலானேன்!''

''கேஸ் ரொம்பவும் சிக்கலோ?''

''சிக்கலோ சிக்கல்......''

''இப்பவாவது.....அது என்ன கேஸுன்னு சொல்லுங்களேன். சென்னையிலிருந்து புறப்படும் போதே கேட்டேன். மும்பை போனதும்

சொல்றேன்னு சொன்னீங்க. இங்க வந்த பிறகும் சொல்லலை.......''

''ரூபி! நான் அந்தக் கேஸைப்பத்தி உன்கிட்ட சொல்லாததற்கு ரெண்டு காரணம்.''

''என்னென்ன காரணம்?''

''இந்த கேஸ் இதுவரைக்கும் எந்த மீடியாவுக்கும் தெரியாது. தெரிஞ்சா அது ஒரு பெரிய 'இஷ்யூ' ஆயிடும்..... மீடியாக்கள் அந்த விஷயத்தை பெரிது படுத்தும் போது மும்பையின் பங்கு மார்க்கெட் பொருளாதார ரீதியாய் பெரிய அளவில் சரியும். அதனால இந்த விஷயத்தை விஷ்ணு தவிர வேற யார்கிட்டயும் சொல்லக்கூடாது. டிஸ்கஸ் பண்ணவும் கூடாது. நான் சென்னையை விட்டுப் புறப்படும்போது டி.ஜி.பி. என்கிட்ட சொன்ன கண்டிஷன் இது. 'என்னோட ஒய்ஃப் கிட்டே சொல்லலாமா'ன்னு கேட்டேன்.''

''அதுக்கு அவர் என்ன சொன்னார்?''

'' 'உங்க மனைவி மூலமாய் விஷயம் வெளியே போகாது என்கிற நம்பிக்கை உங்களுக்கு இருந்தா தாராளமாய் சொல்லலாம்'ன்னு சொன்னார்.''

''என்மேல உங்களுக்கு நம்பிக்கை இருக்குதானே?''

''நீ ஒரு ஸேஃப்டி லாக்கர்ன்னு எனக்குத் தெரியாதா என்ன?''

''அப்புறமென்ன...... விஷயத்தைச் சொல்ல வேண்டியதுதானே?''

''சொல்லிடுவேன்! ஆனா ராத்திரியில் உனக்கு தூக்கம் வராது.''

''என்ன! பயமுறுத்தறீங்களா?

''உண்மையைச் சொல்றேன்.....!''

''மும்பை க்ரைம் ப்ராஞ்ச் போலீஸாலே கண்டுபிடிக்க முடியாத கேஸ் ஒண்ணை உங்க தலையில் கட்டும் போதே இது ஒரு விவகாரமான கேஸ்ன்னு புரிஞ்சுகிட்டேன். கேஸ் என்னான்னு சொல்லுங்க.... அயாம் ரெடி டூ ஹியர்.''

விவேக் சுற்றும் முற்றும் பார்த்தான். 'கேட்வே ஆஃப் இண்டியா' இப்போது இருட்டின் பின்னணியில் வெளிச்சமாய் ஒரு கோட்டை மாதிரி தெரிந்தது. பாப்கார்ன் பொட்டலங்களோடு இளைஞர்

இளைஞிகள் ஜோடி ஜோடியாய் சுற்றித்திரிந்தார்கள். பக்கத்தில் யாரும் இல்லை என்பதை உறுதி செய்து கொண்ட விவேக் மெள்ளப் பேச்சை ஆரம்பித்தான்.

''இந்த மும்பையில் இருக்கிற......!''

''ஒரு நிமிஷம்!''

''என்ன......?''

''பசிக்குதுன்னு சொன்னேனா இல்லையா?''

''ஆமா!''

''நாம ஹோட்டலுக்குப் போய் டின்னர் சாப்பிடறதுக்கு முந்தி...''

''முந்தி?''

''அதோ...! ஒரு வேர்க்கடலை வண்டி தெரியுதே?''

''ஆமா!''

''போய் ரெண்டு பொட்டலம் வேர்க்கடலை வாங்கிட்டு வாங்க.''

''மும்பை வந்ததற்கு நல்ல உத்யோகம்......!'' விவேக் சிரித்துக்கொண்டே எழுந்தான். சற்றுத் தொலைவில் தெரிந்த வேர்க்கடலை வண்டிக்காரனை நோக்கி நடந்தான். சட்டையின் பாக்கெட்டில் குடியிருந்த செல்போன் தன்னுடைய ரிங்டோனை வெளியிட்டது. எடுத்து அழைப்பது யார் என்று பார்த்தான். மறுமுனையில் விஷ்ணு.

''பாஸ்!''

''விஷ்ணு! உன்னோட போனுக்காகத்தான் வெயிட் பண்ணிட்டிருக்கேன். போன காரியம் என்னாச்சு?''

''தாதர்ல நீங்க சொன்ன அட்ரஸுக்குப் போனேன் பாஸ். வீடு பூட்டியிருந்தது. பக்கத்துல பான் பீடா கடை ஒண்ணு இருந்தது. விசாரிச்சேன். நான் பேசின ஒட்டை இந்தி அவனுக்குப் புரியலை. அவன் பேசின நல்ல இந்தி எனக்குப் புரியலை...சரி! மேற்கொண்டு மொழித்தகராறு வேண்டாம்னு புறப்பட்டு வந்துட்டேன்.''

''இப்ப நீ எங்கே இருக்கே?''

''மாதுங்காவில்.''

''அங்க எதுக்குடா போனே?''

''சொன்னா திட்டக்கூடாது பாஸ்...''

''என்ன...! மாதுங்காவில் உன்னோட பால்ய

ஸ்நேகிதி எவளையாவது பார்த்து.....!''

''பாஸ்... பாஸ்...! மேற்கொண்டு ஒரு வார்த்தை கூட பேசிடாதீங்க. இது கார்த்திகை மாசம். சபரிமலை அய்யப்பனுக்கு மானசீகமாக மாலை போட்டிருக்கேன்... நீங்க ஏதாவது ஏடா கூடமாய் பேசி தெய்வக் குத்தத்துக்கு ஆளாகி என்னையும் அதுல பார்ட்னராக்கிடாதீங்க...''

''பின்னே எதுக்காக இப்போ மாதுங்காவுக்குப் போயிருக்கே?''

''உங்ககிட்ட சொல்றதுக்கு என்ன பாஸ்.....? மாதுங்கா ரயில்வே ஸ்டேஷனுக்குப் பக்கத்துல எம்.டி.ஏ. மெஸ்ஸுன்னு ஒண்ணு இருக்கு. கேள்விப்பட்டு இருக்கீங்களா?''

''இல்லையே...! எம்.டி.ஏ.ன்னா?''

''மஹாதேவ அய்யர் பாஸ்! எம்.டி.ஏ.ன்னா மாதுங்காவில் இருக்கிற அத்தனை தமிழ் பேசறவங்களுக்கும் தெரியும். ரவா தோசைக்கும், வெள்ளை ஆப்பத்துக்கும் பேர் போன மெஸ் பாஸ். நான் எப்ப மும்பை வந்தாலும் சரி, மஹாராஷ்ட்ரா மாநில கவர்னரையோ, சீஃப் மினிஸ்டரையோ கூட சந்திக்காமல் போனதுண்டு. ஆனா எம்.டி.ஏ.வுக்கு போய் ரவாதோசை மேல் கை வைக்காமே இருந்தது இல்லை...!''

''கவர்னரும் சீஃப் மினிஸ்டரும் ரொம்பவும் ஃபீல் பண்ணியிருப்பாங்களே?''

''அதையெல்லாம் பார்த்தா முடியுமா பாஸ்.....?''

''சரி... எத்தனை மணிக்கு ஹோட்டல் ரூமுக்கு வருவே?''

''இப்போ மணி ஆறேமுக்கால்....! மெஸ்ல சாப்பிட்டு முடிக்க எப்படியும் ஒரு அரைமணிநேரமாவது ஆகும். அப்புறம் எலக்ட்ரிக் ட்ரெயின் பிடிச்சு விக்டோரியா டெர்மினல் வந்து சேர மினிமம் ஒரு மணி நேரமாவது ஆகும்......!''

''ஒன்பது மணிக்குள்ளே வந்துடுவியா?''

''வந்துடுவேன் பாஸ்.''

''அப்படீன்னு சொல்லிட்டு 'மராட்டா மந்திர்' தியேட்டர்ல ஓடிட்டு இருக்கிற ஹாட் ஃபிலிமைப் பார்க்கப் போயிடாதே!''

''பாஸ்! நான் மறுபடியும் உங்களுக்கு

ஞாபகப்படுத்தறேன். இது கார்த்திகை மாதம். சபரிமலை அய்யப்பனுக்கு மானசீகமாய் மாலை போட்டிருக்கேன். நோ நான் - வெஜ். நோ ஹாட் ஃபிலிம்ஸ்.....''

''ஏண்டா! போன வருஷமும் இதே மாதிரிதான் சபரிமலை அய்யப்பனுக்கு மாலை போட்டிருக்கேன்னு சொன்ன! ஆனா நீ மலைக்கே போகலையே?''

''போய்ட்டு வந்தேன் பாஸ்.''

''டேய்! பொய் சொல்லாதே.''

''நான் எதுக்கு பாஸ் பொய் சொல்லப்போறேன்.....? மலைக்குப்போயிட்டு வந்தது உண்மை. ஆனா நான் போய்ட்டு வந்தது யார்க்கும் தெரியாது. ஏன்னா நான் மானசீகமாய் மாலை போட்டுகிட்டவன். அதனால சபரிமலைக்கும் மானசீகமாய் போய்ட்டு வந்துட்டேன்.''

''........''

''என்ன பாஸ்...! பேச்சைக் காணோம்?''

''உன்னை இங்கிலீஷ்ல திட்டலாமா...... இல்லை தமிழ்ல திட்டலாமான்னு யோசனை பண்ணிட்டிருக்கேன்!''

விவேக் செல்போனில் பேசிக்கொண்டிருக்கும் போதே - அவன் வலது கையை யாரோ தொடுவது போல் உணர்ந்தான்.

திரும்பினான்.

அழுக்கான பச்சைநிற கவுன் அணிந்து பத்து வயதில் ஒரு சிறுமி நின்றிருந்தாள். பரட்டைத் தலை. தோளில் மாட்டிய ஒரு பெரிய கேரி பேக்கில் நிறைய பாப் கார்ன் பொட்டலங்கள் எட்டிப் பார்த்தன. விவேக் செல்போனின் மறுமுனையில் இருந்த விஷ்ணுவிடம் ''ஒரு நிமிஷம்'' என்று சொல்லிவிட்டு சிறுமியை பார்த்தான்.

''பாப்கார்ன் வோனா?'' சிறுமி கேட்டாள்.

''நை சாகியே......! ஜாவ்.....''

விவேக் விரட்ட, அவள் போகாமல் நின்றாள். தன் பெரிய விழிகளை சுழற்றி சுற்றும் முற்றும் பார்த்தாள். பிறகு தன் கையில் வைத்து இருந்த எதையோ நீட்டினாள். ''லேவ்னா...''

''யே.......க்யா......?''

முகம் முழுவதும் பரவிய வியப்போடு விவேக் அவளுடைய கையை உற்றுப் பார்த்தான். நான்காய் மடிக்கப்பட்ட ஒரு கடிதம் போல் தெரிந்தது. பார்த்துக் கொண்டிருக்கும் போதே அந்த சிறுமி விவேக்கின் கையில் அந்த தாளைத் திணித்து விட்டு விருட்டென்று கும்பலில் கரைந்து மறைந்தாள்.

நசங்கிப் போயிருந்த அந்தத் தாளைப் பிரித்தான் விவேக். செல்போனின் மறுமுனையில் காத்திருந்த விஷ்ணுவின் குரல் கேட்டது.

''என்னாச்சு பாஸ்..?''

''விஷ்ணு! நான் ஒரு ரெண்டு நிமிஷம் கழிச்சு போன் பண்றேன்.'' செல்போனை அணைத்த விவேக் அதன் டார்ச் லைட்டை உயிர்ப்பித்து தாளை விரித்தான்.

கிறுக்கலான தமிழ் எழுத்துக்களில் வார்த்தைகள் ஓடியிருந்தது.

*நீங்கள் சென்னை போலீஸின் ஒரு அங்கமான க்ரைம் ப்ராஞ்ச் ஆபீஸர் விவேக் என்று நினைக்கிறேன். என் நினைப்பு சரியா தவறா என்று எனக்குத் தெரியவில்லை. நீங்கள் விவேக்காய் இருக்கும் பட்சத்தில் நான் உங்களோடு பேச விரும்புகிறேன். நான் இதே கூட்டத்தில் 100 மீட்டர் தள்ளியிருக்கிறேன். நீங்கள் விவேக் என்றால் அந்த இடத்தில் இருந்தபடியே வலது கையை உயர்த்துங்கள். நான் இந்தக் கடிதத்தை தமிழில் எழுதிய்தற்குக் காரணம் விவேக்கிற்கு தமிழ் தெரியும் என்பதால்தான். நான் இப்போது உங்களைப் பார்த்துக்கொண்டு இருக்கிறேன். ஒரு நிமிஷ நேரத்திற்குள் நீங்கள் கையை உயர்த்தாவிட்டால் நான் இங்கிருந்து சென்றுவிடுவேன்.*

*- யாரோ ஒருவன் -*

விவேக் கையில் அந்தத் தாளை வைத்துக் கொண்டு சுற்றும் முற்றும் பார்த்தான். இப்போது கூட்டம் அதிகமாய் இருந்தது. இடைவெளியே தெரியாத அளவுக்கு மக்கள் நெருக்கம்

'கடிதத்தை கொடுத்து அனுப்பியவன் எந்த திசையில் இருக்கிறான்?'

'யாரவன்?'

'நல்லவனா..... கெட்டவனா......?'

'என்னிடம் என்ன பேசப் போகிறான்?'

'கையை உயர்த்தலாமா......வேண்டாமா.....?'

விவேக் குழப்பமும் திகைப்புமாய் அதே இடத்தில் அப்படியே நின்றான். 'கேட்வே ஆஃப் இந்தியா' வெளிச்சத்திலும் இரைச்சலிலும் நிரம்பியிருந்தது. விநாடிகள் விரைந்து கொண்டிருந்தன.

வங்கக் கடலின் புயல்காலம் என்பது 4 மாதங்கள்தான். ஆகஸ்ட், செப்டம்பர், அக்டோபர், நவம்பர். இந்தக் குறிப்பிட்ட 4 மாதங்களில் மட்டும்தான் வங்கக்கடலில் புயல் சின்னம் உருவாகிறது. பொதுவாகவே கடலின் நீர் மட்ட வெப்பம் 26.5 டிகிரி என்ற அளவில்தான் இருக்கும். இந்த அளவுக்கு மேல் வெப்பம் அதிகமாகும் போது கடல்நீர் ஆவியாகி மேல் நோக்கி பரவுகிறது. அது வானத்தின் ஒரு குறிப்பிட்ட உயரத்துக்குச் சென்றதும், குளிர்ச்சி அடைந்து மேகமாய் உருவாகிறது. கடல்நீர் ஆவியாகி மேலே செல்லும் பொழுது காற்றின் வேகம் அதிகமாகி ஒரு சுழற்சி உருவாகிறது. குறைந்த காற்றழுத்த மண்டலமாக மாறி சுற்றிலும் பரவியிருக்கும் காற்றை உள்ளிழுக்கும் போது அந்த சுழற்சி வலுவடைந்து ஒரு புயலாக மாறுகிறது. சரி! ஒரு குறைந்த காற்றழுத்த மண்டலம் புயல் என்னும் அந்தஸ்தைப் பெற வேண்டுமானால் அது மணிக்கு எவ்வளவு கிலோ மீட்டர் வேகத்தில் வீச வேண்டும் என்று தெரியுமா?

2

சரியாய் முப்பது விநாடிகள்!

விவேக் தன் வலது கையை உயர்த்திக்கொண்டே சுற்றும் முற்றும் பார்த்தான். மீதி இருந்த விநாடிகள் முப்பது.

நொண்டியடித்துக் கொண்டிருந்தது.

சட்டென்று முதுகை யாரோ தொடும் உணர்வு.

விவேக் திரும்பினான்.

ரூபலா.

''இங்கே என்ன பண்ணிட்டு இருக்கீங்க..?''

''வேர்க்கடலை வண்டி எங்கேன்னு தேடிட்டு இருக்கேன்.''

''என்னங்க இது.... அந்த பேவ்மென்ட்கிட்டே ஏழெட்டு வேர்க்கடலை வண்டிகள் வரிசையாய் நின்னுட்டு இருக்கிறது உங்க கண்ல படலையா?''

''அட...ஆ...ஆமா!'' விவேக் பின்னால் திரும்பிப் பார்த்தான். ''உண்மையிலேயே நீங்க யாரைத் தேடறீங்க?''

''விஷ்ணுவை....''

''அவன்தான் தாதர் போயிருக்கானே!''

''ரூபி...! நீ பழைய இடத்திலேயே போய் உட்காரு. நான் இப்ப வந்துடறேன்....''

''நோ! நான் உங்களை கவனிச்சுட்டுதான் வர்றேன். இப்ப கொஞ்ச நேரத்துக்கு முன்னாடி ஒரு சின்னப் பொண்ணு உங்க கிட்டே பேசிட்டிருந்தா. அவ கையிலிருந்து எதையோ வாங்கினீங்க. படிச்சீங்க. அப்புறம் உங்க வலதுகையை உயர்த்திகிட்டு நின்னீங்க.... உண்மையிலேயே இங்கே என்ன நடக்குது?''

விவேக்கின் உதடுகளில் ஒரு புன்முறுவல் பரவியது.

''ஓ... எல்லாத்தையும் பார்த்துட்டியா..... இனிமே உன்கிட்டயிருந்து எதையும் மறைக்க முடியாது. இந்தா! இந்த லெட்டரைப்படி. தெளிவாய்ப் புரியும்''

ரூபலா குழப்பம் விலகாத முகத்தோடு அந்த லெட்டரை வாங்கி படித்துப் பார்த்து முகம் மாறினாள்.

''என்னங்க இது.....! இப்படியொரு லெட்டர்..? யார் இந்த ஆள்?''

''அதைத் தெரிஞ்சுக்கத்தான் கையைத் தூக்கினேன்.''

''அவன் நல்லவன்னு நினைக்கிறீங்களா?''

''ஒரு நம்பிக்கைதான்.....!''

''வேண்டாங்க... அவனை மீட் பண்றதை

அவாய்ட் பண்ணிடுங்க.''

''இனி அது முடியாது.... நான் கையை தூக்கிட்டேன். அவனும் அதைப் பார்த்த இருப்பான்..... எந்த விநாடியும் அவன் என்கிட்டே வரலாம். நீ பழைய இடத்துல போய் உட்கார் நடக்கிறதை மட்டும் வேடிக்கை பார்த்துட்டு இரு.''

''எனக்கு பயம்மாயிருக்குங்க. நீங்க இங்கே மும்பைக்கு வந்தது ஒரு வில்லங்கமான கேஸை இன்வெஸ்டிகேட் பண்றதுக்காக.....! அதை தெரிஞ்சுகிட்ட யாரோ ஒரு நபர் உங்களுக்கு கெடுதல் செய்ய நினைக்கலாமே?''

''அதாவது என்னோட உயிர்க்கு ஆபத்து வரலாம்ன்னு சொல்றே?''

''ஆமா.''

''எனக்கு எது மாதிரியான ஆபத்து வந்தாலும் அதிலிருந்து எப்படி தப்பிக்கணும் என்கிற தற்காப்பு வழி முறைகள் எனக்குத் தெரியும் ரூபி! நீ கவலைப்படாமே பழைய இடத்துல போய் உட்கார். அவன் யார்ன்னு பார்த்து பேசிட்டு வந்துடறேன்.''

ரூபலா பயப் பார்வையோடு பின்வாங்கி பழைய இடத்தை நோக்கிப் போக- விவேக் மறுபடியும் வலதுகையை உயர்த்திக் காட்டிவிட்டு தாழ்த்தினான்.

கும்பலின் எந்த மூலையிலிருந்து, யார் வரப்போகிறார்கள் என்பதைத் தெரிந்து கொள்வதற்காக 360 டிகிரி கோணத்தில் பார்வைச் சுழற்றினான் விவேக்.

யாரும் அவனை நோக்கி வருகிறமாதிரி தெரியவில்லை.

ஒரு நிமிஷம்...... இரண்டு நிமிஷம்..... மூன்று நிமிஷம் என்று விநாடிகள் விரைந்து கொண்டிருக்க, விவேக் இருப்புக் கொள்ளாமல் தவித்தான். மறுபடியும் கையை உயர்த்திக்காட்டலாமா என்று நினைத்த விநாடி விவேக்கின் செல்போன் மெலிதாய் ரிங்டோனை வெளியிட்டது. செல்போனை எடுத்தான். மறுமுனையில் விஷ்ணு.

''என்ன பாஸ்! ரெண்டு நிமிஷம் கழிச்சு போன் பண்றதாய் சொன்னீங்க...! உங்க குரல்ல டென்ஷன் இருந்தது. என்ன விஷயம் பாஸ்?''

''இங்கே ஒரு சின்ன சலசலப்பு......''

''புரிஞ்சுகிட்டேன்..... உங்களையும் மேடத்தையும் யாரோ ஃபாலோ பண்ணிட்டு வந்து இருக்காங்க. சரியா?''

''சரி......!''

''அது ஒரு ஆண்.''

''சரி.....''

''நீங்க தமிழ்நாடு க்ரைம்ப்ராஞ்ச் ஆபீஸர் விவேக்தானான்னு கேட்டு இருப்பான்.''

விவேக்கின் புருவங்கள் சில மில்லிமீட்டர்களுக்கு உயர்ந்தது.

''எப்படிடா?''

''இதுக்கே இப்படி ஆச்சர்யப்பட்டா எப்படி பாஸ்?''

''சரி... மேற்கொண்டு சொல்லு பார்க்கலாம்.''

''பாப்கார்ன் விக்கிற சின்னப் பெண்ணொருத்தி லெட்டர் கொண்டுவந்து குடுத்து இருப்பா. அந்த லெட்டர்ல 'நீங்க விவேக்காய் இருந்தால் கையைத் தூக்குங்க'ன்னு அவன் லெட்டர்ல எழுதியிருப்பான்''

''டே..டே..டேய்...... எப்படிடா......?''

''ஞானதிருஷ்டி பாஸ்....! தாம்பரத்துக்குப் பக்கத்துல ஒரு சாமியார். பேரு தகிடுதித்தானந்தா! அவர்கிட்டே மூணுமாத கோர்ஸ் எடுத்துக்கிட்டேன். அப்ப கிடைச்சதுதான் இந்த ஞான திருஷ்டி பவர்......!''

''டேய்ய்ய்ய்!'' விவேக் வியப்பில் குரலை உயர்த்தினான். ''மேற்கொண்டு சொல்லவா பாஸ்! நீங்க இதுவரைக்கும் ரெண்டுதடவை கை தூக்கிட்டீங்க. அவன்தான் இன்னும் வரலை..... எனக்கு என்னமோ அவன் உங்களை வந்து பார்ப்பான்னு கொஞ்சம் கூட தோணலை... நீங்க க்ரைம்ப்ராஞ்ச் ஆபீஸர். எவனோ ஒருத்தன் லெட்டர் குடுத்து நீங்க க்ரைம்ப்ராஞ்ச் ஆபிஸராய் இருந்தா கையைத் தூக்குங்கன்னு சொன்னா உடனே ஸ்கூல் பையன் மாதிரி கையைத் தூக்கிடறதா?''

''விஷ்ணு விளையாடாதே! உனக்கு எப்படி இந்த விஷயம் தெரியும்?''

''டென்ஷன் ஆகாதீங்க பாஸ். எல்லாம்

மேடத்தோட உபயம்.''

''யாரு ரூபலாவா?''

''ம்... ரெண்டு நிமிஷத்துக்கு முன்னாடிதான் ரூபலா மேடம் எனக்கு போன் பண்ணி பாப்கார்ன் சிறுமி, லெட்டர், நீங்க கையைத் தூக்கின விஷயம் எல்லாத்தையும் சொல்லிட்டாங்க......! என்னையும் உடனே கேட்வே ஆஃப் இண்டியாவுக்கு புறப்பட்டு வரச் சொல்லிட்டதால நானும் ஒரு டாக்ஸி பிடிச்சு வந்துட்டிருக்கேன். யார் பாஸ் அவன்...? உங்க கண்ணுல பட்டுட்டானா?''

''இன்னும் இல்ல.....! வெயிட் பண்ணிட்டிருக்கேன்.''

''பாஸ்! நாம மும்பைக்கு வந்தது யார்க்கும் தெரியாதுன்னு நினைச்சிட்டிருந்தோம். ஆனா யார்க்கோ தெரிஞ்சிருக்கு.... நாம எவ்வளவோ புத்திசாலித்தனத்தோடு செயல்பட்டாலும் க்ரிமினல்ஸ் அதைவிட புத்திசாலிகளாய் இருக்காங்க.. நம்ம டிபார்ட்மெண்ட் ஒரு ஓட்டைப் பாத்திரம் பாஸ்.''

''விஷ்ணு!''

''பாஸ்.''

''நான் அப்புறமாய் பேசறேன்.''

''ஏன்...பாஸ்... அவன் வர்றானா?''

''வர்றது அவன் இல்லை.''

''பின்னே....?''

''அந்த பாப்கார்ன் பொண்ணு.'' சொன்ன விவேக் செல்போனை அணைத்து விட்டு அந்த சிறுமியை எதிர் கொண்டான். மறுபடியும் அவளுடைய கையில் மடிக்கப்பட்ட தாள்.

வேக வேகமாய் வந்து அந்தச் சிறுமி விவேக்கின் கையில் அந்தத்தாளைத் திணித்துவிட்டு அதே வேகத்தோடு கும்பலுக்குள் புகுந்து மறைந்தாள்.

திகைப்பிலிருந்து மீண்ட விவேக் கடிதத்தை பரபரவென்று பிரித்துப் படித்தான்.

*சூழ்நிலை சரியில்லை. நாளைக்கு மாலை 'விலே - பார்லே'வில் லால்ஜி பூங்காவுக்கு அருகில் இருக்கும் 'ஜஸ்ட் ரிலாக்ஸ்' ரெஸ்டாரெண்டுக்கு சரியாய் ஏழு மணிக்கு வாருங்கள். உடன் யாரையும் அழைத்து வரவேண்டாம். என் முந்தைய*

கடிதத்திற்கு மதிப்பு கொடுத்து நீங்கள்தான் விவேக் என்பதை ஒத்துக் கொண்ட உங்களுக்கு என் நன்றி!

காற்றின் வேகம் மணிக்கு 75 கிலோ மீட்டர் என்ற அளவில் இருந்தால் மட்டுமே அது புயல் என்று அழைக்கப்படுகிறது. புயல் மெள்ள மெள்ள வலுவடையும் போது அது ஒரு வண்டிச்சக்கரம் போல் உருமாற்றம் பெற்று சுழல ஆரம்பிக்கிறது. அந்தச் சக்கரத்தின் மையப்பகுதியை 'புயலின் கண்' என்று அழைக்கிறார்கள். இந்த புயலின் கண் அருகே காற்றின் வேகம் அதிகமாய் இருப்பதின் காரணமாய் அது கடலின் மேற்பரப்பில் உருண்டு கொண்டே போகும். மேகங்களை சுருட்டிக் கொண்டு வேகமாய் கரையை நோக்கி பயணிக்கும் அந்தப்புயலை வானிலை நிபுணர்கள் உன்னிப்பாய் கவனிப்பார்கள். புயலின் கண் அசைவை வைத்து அதன் வேகம் என்ன? எந்த திசையில் அதன் போக்கு இருக்கும்? அதன் இலக்கு தமிழகமா, ஆந்திராவா... ஒரிசாவா?- என்பதை நிர்ணயம் செய்வார்கள்.



இரவு பத்துமணி.

விக்டோரியா டெர்மினல்ஸுக்கு எதிரே இருந்த வால்ஸ் ரோட்டில் எக்ஸல்சைர் ஹோட்டல். ஏழாவது மாடி. அறை எண் 737.

சாலையைப் பார்த்தபடி இருந்த அறையின் சிட் அவுட்டில் விவேக், ரூபலா, விஷ்ணு மூன்று பேரும் உட்கார்ந்திருந்தார்கள். வெளியே மும்பை தீப்பிடித்து எரிகிற தினுசில் மின்சார உபயத்தால் வெளிச்சமாய் இருந்தது. உயரமான கட்டிடங்களின் உச்சிகளில் பொருத்தப்பட்டு இருந்த சிவப்பு விளக்குகள் ஸ்லோமோஷனில் அணைந்தன. பின் எரிந்தன. மூன்று பேரும் பேசிக்

கொண்டிருந்தார்கள்.

''பாஸ்! இது யோசிக்க வேண்டிய விஷயம். நாளைக்கு சாயந்தரம் அந்த யாரோ ஒருவனை முன்பின் தெரியாத இடத்தில் நீங்க பார்க்கப்போறது சரியில்லை....''

''விஷ்ணு சொல்றதுதாங்க சரி.....'' இது ரூபலா.

விவேக் மறுத்தலாய் தலையாட்டினான்.

''எனக்கென்னவோ அவன் தப்பான நபர் மாதிரி தெரியலை...!''

''பாஸ்! நீங்க அவனைப் பார்க்கவேயில்லை. அப்படியிருக்கும் போது அவன் தப்பான நபர் இல்லைன்னு எப்படி சொல்றீங்க...?''

''ஆளைப் பார்க்காமே போனாலும் அவன் எழுதின ரெண்டு லெட்டர்களிலேயும் இருக்கிற வாசகங்களில் ஒரு ஸாஃபட்னஸ் தெரியுது.''

''அது ஸாஃப்ட்னஸ் இல்லை பாஸ்.''

''பின்னே?''

''கன்னிங்னஸ்...

''சரி... போய்ப் பார்த்துடறேன்... அது கன்னிங்னஸ்ஸா.... இல்லை சாஃப்ட்னஸ்ஸான்னு......!''

''வேண்டாம் பாஸ்... அது பாம்பா பழுதான்னு தெரியாத போது அதை எதுக்காக தொட்டுப் பார்க்கணும்?''

''விஷ்ணு! நீ ரொம்பவும் பயப்படறே!''

''நான் பயப்படறதுக்கு காரணம் இருக்கு பாஸ்.''

''என்ன?''

''நாம எதுக்காக மும்பை வந்திருக்கோம்..? ஊரைச் சுத்திப் பார்க்கவா? இல்லை...! ஒரு விவகாரமான- வில்லங்கமான கேஸை மீடியாக்களுக்குத் தெரியாத வகையில் இன்வெஸ்டிகேட் பண்ணி உண்மையை வெளியே கொண்டு வர்றதுக்காகத்தான். இது உண்மையா இல்லையா பாஸ்?''

''உண்மைதான்.....''

''தமிழ்நாடு டி.ஜி.பி.யும் மஹாராஷ்ட்ரா டி.ஜி.பி.யும் திரும்பத் திரும்ப நம்ம கிட்டே சொன்ன ஒரே வாக்கியம், எந்த ஒரு சந்தர்ப்பத்திலும் எந்த ஒரு பிரச்னைக்காகவும்- நாம மும்பையில் இருந்து

கேஸை ஒரு முடிவுக்கு கொண்டு வருகிற வரையில்- நீங்களோ நானோ யார்ன்னு மீடியாக்களுக்குத் தெரியக்கூடாதுங்கிறதுதான்... ஆனா நீங்க யாரோ ஒருத்தன் லெட்டர் எழுதி 'நீங்க விவேக்தானா'ன்னு கேட்ட கேள்விக்கு 'ஆமா'ன்னு சொல்லி கையைத்தூக்கிட்டீங்க. அதுமட்டும் இல்லை. நாளைக்கு சாயந்தரம் ஏழு மணிக்கு விலே - பார்லேவில் இருக்கும் ஹோட்டலில் வெச்சு அவனைப் பார்த்துப் பேசவும் முடிவு பண்ணிட்டீங்க. இது எந்த வகையில் நியாயம் பாஸ்?''

விவேக்கின் உதடுகளில் ஒரு புன்முறுவல் பரவியது.

''விஷ்ணு! உனக்கு ஒரு விஷயம் புரியலை.''

''என்ன சொல்றீங்க பாஸ்...?''

''தமிழ்நாடு டி.ஜி.பியும், மஹாராஷ்ட்ரா டி.ஜி.பி.யும் நம்மகிட்டே ஒரு விவகாரமான-வில்லங்கமான கேஸை ஒப்படைச்சதாய் சொன்னே.....! அந்த கேஸ் சம்பந்தமாய் சில ஆதாரங்களையும் நம்மகிட்டே கொடுத்து இருக்காங்க. அந்த கேஸ் சம்பந்தப்பட்ட ஃபைலை நீயும் நானும் படிச்சுப் பார்த்தோம். நம்ம ரெண்டு பேர்க்குமே பைத்தியம் பிடிக்காத நிலைமை. ஃபைலைப் படிச்சுப் பார்த்துட்டு நீ என்ன சொன்னேன்னு உனக்கு ஞாபகம் இருக்கா?''

''நல்லாவே இருக்கு பாஸ்.''

''என்ன சொன்னேன்னு சொல்லு பார்க்கலாம்?''

''பாஸ்! இது கேஸ் இல்லை. அழுகிப் போன முட்டை கோஸ்ன்னு சொன்னேன்.''

''ரெண்டு டி.ஜி.பி.க்களும் இந்த விவகாரமான கேஸை நம்மகிட்டே ஒப்படைக்கும் போது இது மீடியாக்களின் பார்வைக்கோ, பொது மக்களின் கவனத்துக்கோ போகாமே பார்த்துக்கச் சொன்னாங்க. நம்ம ரெண்டு பேரையும் யாரும் அடையாளம் கண்டு கொள்ளக் கூடாதுன்னும் ஒரு கண்டிஷன் போட்டாங்க... அவங்க அப்படி சொன்னபோது நான் மறுப்பேதும் சொல்லாமே தலையாட்டி வெச்சேன். காரணம் நமக்கு மேலே உள்ள அதிகாரிகள் ஒரு உத்தரவை பிறப்பிக்கும்

போது அதை அப்போஸ் பண்றதோ கவுண்ட்டர் ஆர்க்யூமெண்ட் பண்றதோ டிபார்ட்மென்ட்ரீதியான குற்றம்.''

''இப்ப அந்த உத்தரவை மீறலாம்ன்னு சொல்ல வர்றீங்களா பாஸ்?''

''உத்தரவை நாம மீறலை..... அது மாதிரியான ஒரு சந்தர்ப்பம் வாய்க்கும் போது அதை நாம ஃபேஸ் பண்ணித்தான் தீரணும். நாம மூணு பேரும் ரெண்டு நாளைக்கு முந்தி யார்க்கும் தெரியாமேத்தான் மும்பை வந்தோம். ஹோட்டல்ல ரூம் எடுத்து தங்கினோம். நீயும் நானும் எது மாதிரியான கேஸை டீல் பண்ணி உண்மைகளை வெளியே கொண்டு வரப் போகிறோம் என்கிற விபரம் கூட ரூபலாவுக்குத் தெரியாது. ஆனா கொஞ்ச நேரத்துக்கு முந்தி கேட்வே ஆஃப் இண்டியாவில் அவ்வளவு கூட்டத்துக்கு நடுவிலேயும் எவனோ ஒருத்தன் என்னை ஸ்மெல் பண்ணிட்டான். அவன் நல்லவனா கெட்டவனான்னு எனக்குத் தெரியாது. அவன் என்னைப் பார்க்க விரும்பறான். ஏதோ சொல்ல நினைக்கிறான். அதுக்கு வாய்ப்பு குடுத்து பார்க்கலாமேன்னு நான் சொல்றேன்.''

''பாஸ்! துணிச்சலுக்கும் அசட்டுத் துணிச்சலுக்கும் நிறைய வித்தியாசம் இருக்கு. நீங்க அவனை மீட் பண்ணப் போறது அசட்டுத்துணிச்சல். அவனால உங்க உயிர்க்கு எந்த நிமிஷத்திலும் ஆபத்து வரலாம்!''

ரூபலா குறுக்கிட்டாள்.

''வெயிட்... வெயிட்...! மொதல்ல நீங்க ரெண்டு பேரும் ஏதோ ஒரு வில்லங்கமான-விவகாரமான கேஸை டீல் பண்றதுக்காக மும்பை வந்து இருக்கிறதாய் சொன்னீங்களே... அது என்ன கேஸ்ன்னு எனக்கு இப்ப தெரிஞ்சாகணும்.''

''என்ன பாஸ்...! மேடத்துகிட்டே நீங்க இன்னமும் அந்த டாபிக்கை ஓப்பன் பண்ணவே இல்லையா?''

''இல்லை...''

''நீங்க சொல்லியிருப்பீங்கன்னு நினைச்சேன் பாஸ்.''

''அதனால் என்ன...? இப்ப நீயே சொல்லிடு......!''

விஷ்ணு ரூபலாவிடம் திரும்பினான்.

''மேடம்...! நானும் பாஸும் இந்த மும்பைக்கு வந்தது ஒரு வி.ஐ.பி. கேஸை டீல் பண்ணத்தான். அவர் அரசியலில் மிக முக்கியப் புள்ளிகளுக்கு வேண்டியவர். இந்தியாவின் 100 பெரிய பணக்காரர் பட்டியலில் அவர்க்கு 21-வது இடம். யார் அவர்ன்னு உங்களால கெஸ் பண்ண முடியுதா?''

''கெஸ் பண்ணிட்டிருக்க நேரமில்லை! எனக்கு டெஸ்ட் வைக்காமே நீயே சொல்லிடு.''

''சரண் அத்வாலே'' என்றான் விஷ்ணு.

''ம்..ம்... கேள்விப்பட்டிருக்கேன்... டி.வி நியூஸ்ல அடிக்கடி இந்தப்பேரைச் சொல்வாங்க... ஐ.பி.எல். கிரிக்கெட்ல கூட இவர் ஒரு டீமை ஸ்பான்ஸர் எடுத்திருக்கார் இல்லையா?''

''கரண்ட் நியூஸ்ல இருக்கீங்க மேடம்.''

''நீ விஷயத்துக்கு வா. அவர்க்கும் இந்த கேஸுக்கும் என்ன சம்பந்தம்.....?''

விஷ்ணு விவேக்கிடம் திரும்பினான். ''பாஸ்! என்னோட 'ஐ' பேடை எடுத்து அதில் இருக்கிற போட்டோக்களைக் காட்டட்டுமா?''

''காட்டு.....!''

விஷ்ணு தன்னுடைய ப்ரீப்கேஸைத் திறந்து 'ஐ' பேடை எடுக்க- ரூபலா கலவரக் கண்களோடு விவேக்கைப் பார்த்தாள்.

''என்னங்க...! இவன் 'போட்டோ கீட்டோ'ங்கிறான்.''

''ரூபி! அந்தப் போட்டோக்களைப் பார்த்தாத்தான் உனக்கு இந்த கேஸ் எந்த அளவுக்கு விவகாரமானதுன்னு தெரியும்......''

விஷ்ணு அதற்குள் 'ஐ'பேடை சீண்டி அதை உயிர்ப்பித்து ஒரு பாஸ்வேர்ட் மூலமாக போட்டோ ஆப்ஷனுக்குப் போனான். 'ஐ'பேடின் திரை மத்தியில் சின்னச் சின்னதாய் எட்டுப் போட்டோக்கள்.

''மேடம்! நான் இப்போ ஒவ்வொரு போட்டோவாய் ஜூம் பண்ணி 'க்ளோஸப்'ல காட்டப் போறேன். பார்க்க நீங்க ரெடியா?''

''ம்......''

முதல் போட்டோவை ஜூம் செய்து 'க்ளிக்'கினான் விஷ்ணு. போட்டோ பெரிதாகி திரையை அடைத்துக் கொள்ள ரூபலா பார்வையைக் கொண்டு போனாள். விழிகள் நிலைகுத்தியது. உதடுகள் நடுங்கியது.

''எ...எ.....என்னடா இது...?''

''உங்களுக்கு எது மாதிரி தெரியுது?''

''வெட்டி எடுத்த மனுஷனோட கை மாதிரி தெரியுது.''

''அதே தான் மேடம்...! இது துண்டிக்கப்புட்ட இடது கை. இப்ப வலதுகையைப் பார்க்கறீங்களா?''

அடுத்த போட்டோவை 'க்ளிக்' செய்தான்.

ஐந்து விரல்களும் மூடிய நிலைமையில் இன்னொரு துண்டிக்கப்பட்ட கை பார்வைக்கு கிடைத்தது. ரூபலா அதிர்ந்து போனவளாய் முகத்தைத் திருப்பிக் கொண்டாள்.

''என்ன மேடம்..: இதுக்கே இப்படி அப்செட் ஆயிட்டா எப்படி? முக்கியமானதை நீங்க பார்க்க வேண்டாமா?'' சொன்னவன் இன்னொரு போட்டோவை ஜூம் செய்தான்.

வெட்டுப்பட்ட வழுக்கை மண்டையுடன் ஒரு மனிதத்தலை ஒருக்களித்த நிலையில் தெரிந்தது.

ரூபலா வீறிட்டாள்.

''டேய்...! மொதல்ல 'ஐ' பேடை க்ளோஸ் பண்ணு.'' விஷ்ணு அதை அணைத்தான். ரூபலா நடுங்கும் கரத்தோடு விவேக்கின் தோள்பட்டையைப் பிடித்துக் கொண்டாள்.

''இ...இ...இது...யார்ங்க......?''

''இவர்தான் சரண் அத்வாலே. வயசு அம்பத்தி அஞ்சு. இந்தியாவில் இருக்கிற முதல் 100 பணக்காரர்களில் இவர்க்கு 21-வது இடம். பிசினஸ் ஜயண்ட். சரண் ஜெட் ஏர்வேஸ் மூலம் உலகம் முழுவதும் விமானங்களைப் பறக்கவிட்டு கோடிக்கணக்கான ரூபாய்களை சம்பாதிச்சிட்டிருந்தார். இந்த நிமிஷம் அந்த மனுஷன் உயிரோடு இல்லை. ரெண்டு வாரத்துக்கு முந்தி படுகொலை செய்யப்பட்டிருக்கார். அவரோட உடம்பை எட்டு துண்டுகளாக்கி மும்பை பாந்ராவில்

இருக்கிற அவரோட பண்ணை வீட்டின் பின்புறம் எட்டு இடங்களில் சின்னச் சின்ன குழிகளாய் வெட்டி புதைச்சிருக்காங்க. அதுக்கப்புறம் அவரோட மகன் மஹி அத்வாலேவுக்கு போன் பண்ணி விஷயத்தைச் சொல்லியிருக்காங்க... மஹி தன்னுடைய குடும்ப நண்பரான மஹாராஷ்ட்ரா டி.ஜி.பி. சௌத்ரிக்கு போன் பண்ணி விஷயத்தை சொல்லவும், டி.ஜி.பி., உயர் போலீஸ் அதிகாரிகள் ஐந்து பேரோடு ஸ்பாட்டுக்குப் போய் குறிப்பிட்ட இடங்களைத் தோண்டிப் பார்த்திருக்கார். சரண் அத்வாலேவின் உடம்பு எட்டுத் துண்டுகளாகப்பட்டு புதைக்கப்பட்டு இருந்ததைப் பார்த்து அதிர்ந்து போன டி.ஜி.பி. அந்த விஷயத்தை உள்துறை அமைச்சரும், அவருடைய உறவினருமான ஜெய்பால் சர்மாவுக்கு கன்வே பண்ணியிருக்கார்.''

ரூபலா இடைமறித்தாள்.

''என்னங்க இது...! இது எவ்வளவு பெரிய அதிர்ச்சியான செய்தி. பேப்பர், டி.வி. எதிலேயும் இந்த நியூஸ் வரலையே?''

''எப்படி வரும்....? சரண் அத்வாலே கொலை செய்யப்பட்ட விஷயம் எந்த மீடியாவுக்கும் போகக்கூடாதுன்னு தடை உத்தரவு போட்டவரே உள்துறை அமைச்சர் ஜெய்பால் சர்மாதானே?''

''எதுக்காக அப்படியொரு தடை?''

''சரண் அத்வாலே சமீப காலமாய் ஒரு தீவிரவாத இயக்கத்தோடு தொடர்பு வைத்திருந்ததாய் உளவுத்துறை மூலம் உள்துறை அமைச்சர்க்கு செய்தி போயிருக்கு. அது சம்பந்தமான ஒரு விசாரணையை மேற் கொள்ளும்படி சி.பி.ஐ.க்கு உத்தரவு போட்டிருந்தார் அமைச்சர் ஜெய்பால் சர்மா. சி.பி.ஐ. உண்மையைக் கண்டுபிடிக்கிற வரை 'சரண் அத்வாலே' கொலை செய்யப்பட்ட விஷயம் ஒரு அண்டர் க்ரௌண்ட் நியூஸாகத்தான் இருக்கும்.''

ரூபலா தன் புருவங்களை உயர்த்தினாள்.

''சரண் அத்வாலே கொலையான விவகாரத்தை சி.பி.ஐ. ஹேண்டில் பண்ணிட்டிருக்கும் போது நீங்களும் விஷ்ணுவும் ஏன் மும்பை வந்து யார்க்கும் தெரியாமே இன்வெஸ்டிகேட் பண்ணனும்?''

''இதுவும் உள்துறை அமைச்சகத்தின் ஏற்பாடுதான். சரண் அத்வாலேவின் கொலைக்குக் காரணமான எதிரிகள் சி.பி.ஐ.யோட நடவடிக்கைகளைத்தான் உன்னிப்பாய் வாட்ச் பண்ணிட்டிருப்பாங்க. சி.பி.ஐ. ஒரு சம்பிரதாயமான இன்வெஸ்டிகேஷனை செய்துகிட்டு இருக்கும் போதே ஒரு தீவிரமான புலன் விசாரணை தேவைங்கிறதுக்காக என்னையும் விஷ்ணுவையும் வரவழைச்சு இந்தக் கேஸை ஒப்படைச்சிருக்காங்க...... இது ஒரு அபிஷியல் டூர் மாதிரி இருக்கக் கூடாதுங்கிறதுக்காக உன்னையும் மும்பைக்கு கூட்டிட்டு வந்தேன்.''

ரூபலாவின் முகம் வியர்த்திருந்தது.

''எ...எ...என்னங்க?''

''ம்...''

''நீங்களும் விஷ்ணுவும் மும்பைக்கு வர்றது ஒரு ரகசியமான விஷயமாய் இருக்கும்போது எவனோ ஒருத்தன் கொடுத்துவிட்ட லெட்டர்க்கு மதிப்பு கொடுத்து 'நான்தான் விவேக்'ன்னு கையை உயர்த்தினது எந்த வகையில் நியாயம்?''

''என்னோட கேள்வியும் அதுதான் மேடம். ஸ்கூல்ல தமிழ் வாத்தியார் அட்டெனென்ஸ் எடுக்கும் போது 'உள்ளேன் அய்யா!'ன்னு எந்திரிச்சு சொல்ற மாதிரி பாஸ் கையை உயர்த்திட்டார். லெட்டர் கொடுத்தவன் இப்போ விலே பார்லேவில் இருக்கிற ஒரு ரெஸ்டாரெண்ட்டுக்கு 'தனியா வா'ன்னு கூப்பிட்டிருக்கான். இது எவ்வளவு பெரிய ரிஸ்க்கான விஷயம்ன்னு பாஸுக்குத் தெரியலை.''

''விஷ்ணு! உன்னோட புலம்பலை நிறுத்தறியா?''

''அவன் ஒண்ணும் புலம்பலை. உண்மையைத்தான் சொல்லிட்டிருக்கான். நீங்க 'விலே-பார்லே' ரெஸ்டாரெண்ட்டுக்கு தனியாய் போக வேண்டாம். விஷ்ணுவையும் கூட கூட்டிட்டுப் போங்க...!''

''அவன் என்னைத் தனியாத்தான் வரச்சொல்லியிருக்கான்.''

''அப்படீன்னா...டி.ஜி.பி.க்கு இன்ஃபார்ம் பண்ணிட்டு போங்க. அவர் உங்களுக்கு ஒரு

இன்விஸிபிள் செக்யூர்ட்டிரிய ஏற்பாடு பண்ணிக் குடுப்பார்.''

''வேண்டாம் ரூபி...! இந்த சரண் அத்வாலே படுகொலைக்குப்பின்னாடி இருக்கிற உண்மைகள் வெளியே வரணும்ன்னா நான் மட்டும் தனியா போய் அவனை மீட் பண்ணணும். நான் போலீஸுக்குப் போயிட்ட விஷயம் அவனுக்குத தெரிஞ்சுட்டா அவன் ரெஸ்டாரெண்ட்டுக்கு வரமாட்டான்.''

ரூபலா கோபாமாய் விஷ்ணுவிடம் திரும்பினாள்.

''விஷ்ணு...! உன்னோட பாஸை என்ன பண்ணலாம்?''

''ஒண்ணும் பண்ண முடியாது மேடம்... என்னோட பாஸைப் பத்தி எனக்குத் தெரியும். அவர் ஒரு விஷயத்துல முடிவு எடுத்துட்டார்ன்னா எடுத்ததுதான். அதுக்கப்புறம் ஐ.நா. சபையே தலையிட்டு வேண்டாம்ன்னு சொன்னாலும் கேட்க மாட்டார். நீங்க அவரோட நெற்றியில் ரத்தத் திலகம் இட்டு... வேண்டாம்.... ஒரு குங்குமப் பொட்டு வெச்சு போர்க்களத்துக்கு ஸாரி...ரெஸ்டாரெண்ட்டுக்கு அனுப்பி வையுங்க.... அதுக்கப்புறம் அவர் திரும்பி வர்ற வரைக்கும் கந்தர் சஷ்டி படிங்க...! நான் இந்த மும்பையில் இருக்கிற சின்காட் சித்தி விநாயகர் கோயிலுக்கு போய் பாஸ் பேர்க்கு அர்ச்சனை பண்ணிட்டு வர்றேன்.''

விவேக் இரண்டு பேர்களையும் பார்த்து புன்னகைத்தான். ரூபலா கிண்டலாய்க் கேட்டாள். ''இந்தப் புன்னகைக்கு என்ன பொருளோ?''

''நீங்க ரெண்டு பேருமே ஒரு விஷயத்தைப் புரிஞ்சுக்கலை.''

''என்ன?''

''சரண் அத்வாலே கொலை செய்யப்பட்டு ரெண்டு வார்த்துக்கு மேலாகியும் சி.பி.ஐ. யால எதுவும், முடியலை. கொலையாளி யார், எந்த திசையில் நின்னுட்டிருக்கான்னு கெஸ் கூட பண்ண முடியாத நிலை. ஆனா நானும் விஷ்ணுவும் மும்பை வந்த ரெண்டாவது நாளே எதிர் அணியிலிருந்து ஒரு அழைப்பு.....''

''அது அழைப்பு இல்லை பாஸ். விபரீதம்!''

''மே..பி..... இது ஒரு விபரீத விளையாட்டுதான், எதிரி விளையாட கூப்பிடறான்.''

''போய் விளையாடுங்க பாஸ்! இனி ஆட்டம் உங்க கையில்.''

வங்கக்கடலில் புயல் சின்னம் உருவானதும் வானிலை அறிவிப்பு இப்படி வெளியாகும்: 'அடுத்த 24 மணி நேரத்தில் தமிழ் நாட்டின் கடற்கரை மாவட்டங்களிலும், தென் மாவட்டங்களிலும் இடியுடன் கூடிய கனத்த மழை பெய்யும். மழை தொடர்ந்து இரண்டு நாட்கள்வரை நீட்டிக்கும்.' வானிலை அதிகாரிகள் கூறும் இந்த அறிவிப்பு சில சமயங்களில் புஸ்வாணமாய் போய்விடுவது உண்டு. இடியுடன் கூடிய கனத்த மழை பெய்வதற்கு பதிலாக லேசாய் தூறல் போட்டுவிட்டு போய்விடும். இப்படி மழை நம்மை ஏமாற்றுவதற்குக் காரணம் வானில் ஏற்படும் மேகக் கூட்டங்கள் பின்னர் உருவாகும் தட்ப வெப்ப நிலைக்கு ஏற்ப தங்கள் போக்கை மாற்றிக் கொள்வதால் கனத்த மழை பெய்வதற்கு பதிலாக மிதமாய் பெய்துவிட்டு மேகங்களைக் கூட்டிக் கொண்டு வேறு பக்கமாய் நகர்ந்துவிடும். குறைந்த காற்றழுத்தம், புயல் இவைகள் பயணம் செய்யும் பாதை எந்த நேரத்தில் எப்படி மாறும் என்பதைத் திட்டவட்டமாய்- துல்லியமாய் கணித்துச் சொல்வது என்பது இயலாத ஒன்று. வானிலை அறிவிப்பாளர்களை கிண்டல் செய்து பேசுபவர்கள் இந்தக் கருத்தை கவனத்தில் கொள்ள வேண்டும்.




விலே-பார்லேவின் மையப் பகுதியில் இருந்த லால்ஜி பார்க் அருகே டாக்ஸியை நிறுத்தி இறங்கிக் கொண்டான் விவேக். இதயம் லேசான உதைப்பில்

இருந்தது.

லால்ஜி பார்க் பெரிய பெரிய மரங்களோடு ஏதோ ஒரு காட்டுப் பகுதி போல் காட்சியளிக்க, வயதான நபர்கள் சிமெண்ட் பெஞ்சுகளில் சாய்ந்திருந்தார்கள். குழந்தைகளின் கத்தல் கேட்டது.

பார்க்குக்கு எதிரில் இருந்த ஐஸ்க்ரீம் பார்லரில் கோன் ஐஸ்க்ரீம் சாப்பிட்டுக் கொண்டிருந்த ஒரு இளைஞனிடம் இந்தியில் 'ஜஸ்ட் ரிலாக்ஸ்' ரெஸ்டாரெண்ட் எங்கேயிருக்கிறது என்று கேட்க அவன் வாயில் இருந்த ஐஸ்க்ரீமை அவசர அவசரமாய் தொண்டைக்கு அனுப்பிவிட்டு சொன்னான்.

''யே ராஸ்தே மே ஸீதா சலோ. பஹ்லே கல்லி. செக்கண்ட் கட்''

''சுக்ரியா'' விவேக் ஒரு நன்றியை புன்னகையுடன் சேர்த்து வழங்கிவிட்டு நடந்தான்.

விலே-பார்லே ஏரியா பணக்கார வாசனையோடு மாடர்ன் ஆர்க்கிடெக்ட் முறையில் கட்டப்பட்ட வீடுகளுடன் தெரிய, சாலையோரமாய் நேர்த்தியாய் வளர்க்கப்பட்ட மரங்கள் வரிசையாய் வந்தது. விவேக் ஒவ்வொரு வீட்டைக் கடக்கும் போதும் நாய்கள் குரைக்க, எல்லா வீடுகளிலும் டெலிவிஷன் உயிரோடு இருந்தது. தெருவில் நடமாட்டம் இல்லை. கோன் ஐஸ்க்ரீம் பேர்வழி சொன்னது போலவே முதல் கல்லியில் திரும்பி இரண்டாவது தெருவில் நுழைந்தான்.

நாலு மீட்டர் தூரத்திலேயே - 'ஜஸ்ட் ரிலாக்ஸ்' ரெஸ்டாரண்ட் கண்ணாடிச் சுவர்களோடு பார்வைக்குக் கிடைத்தது. ரெஸ்டாரண்ட்டின் உச்சியிலும் பக்கவாட்டுப் பகுதிகளிலும் நியான் எழுத்துக்கள் நிறம் நிறமாய் மின்னின.

**ஹேவ் ஏ ஃபைனஸ்ட் டின்னர் வித் சைனீஸ் மீல்.**

**ஹை க்வாலிட்டி லோயஸ்ட் பிரைஸ்.**
**என்ஜாய் ஹோம் அட்மாஸ்பியர்.**
**டேக் ஹைஜீனிக் ஃபுட்.**

கண்ணில்பட்ட வாசகங்களைப் படித்துக் கொண்டே விவேக் ரெஸ்டாரெண்ட்டுக்குள்

நுழைந்தான். சற்று பெரிதான அரையிருட்டான வெளிச்சம். சொற்பமான கூட்டம் பெரும்பாலும் ஆண்- பெண் ஜோடிகள். ஹாலின் ஏதோ மூலையில் இருந்து வயலின் கசிந்தது.

விவேக் காலியாய் இருந்த ஒரு மேஜையை ஆக்ரமித்தான். அடுத்த விநாடியே 'ட்ராகன் லோகோ' பிரிண்ட் செய்யப்பட்ட யூனிஃபார்மோடு பேரர் எதிரேவந்து நின்று மெனு கார்டை வைத்தான்.

''வெயிட்டிங் ஃபார் சம்படி. ஐ வில் கால் யூ...''

''ஓ.கே ஸார்.''

விவேக் மெனு கார்டைப் புரட்டி ஸ்டார்ட்டர் வகைகளைப் படித்துக் கொண்டிருந்த போது எதிரே காலியாய் இருந்த நாற்காலியில் யாரோ வந்து உட்கார்வது தெரிந்தது.

நிமிர்ந்தான்.

ஒரு பெண்.

அழகாக இருந்தாள். பெரிய கண்கள். அளவான மூக்கு. சதைப்பற்றோடு- லிப்ஸ்டிக் பூச்சு இல்லாத மெலிதான ரோஸ் உதடுகள். உதட்டின் மேற் பரப்பில் ஒரு சிறிய கடுகு இடம் பிடித்துக் கொண்டது போல் ஒரு மச்சம். அவள் இயல்பாய் இருக்க முயன்றாலும் உடம்பில் ஒரு பதட்டம் தெரிந்தது. விவேக்கைப் பார்த்து புன்னகைக்க முயன்றாள்.

''சொன்ன நேரத்துக்கு சரியா வந்துட்டீங்க... ரொம்பவும் நன்றி.''

வியப்பு பரவிய கண்களோடு விவேக் நிமிர்ந்து உட்கார்ந்தான். ''நீ...நீ...நீ?''

''நீங்க நேற்றைக்கு கேட்வே ஆஃப் இண்டியாவில் உங்க மனைவியோடு இருந்தபோது பாப்கார்ன் பொண்ணு மூலமாய் லெட்டர் குடுத்துவிட்டது நான்தான்.''

''லெட்டர்ல 'யாரோ ஒருவன்'னு எழுதப்பட்டு இருந்தது.''

''நான் ஒரு பெண் என்கிற உண்மை தெரிஞ்சா நீங்க வர்றதுக்கு தயக்கம் காட்டலாம்ன்னு நினைச்சேன்.''

''இட்ஸ் ஓ.கே! என்கிட்டே என்ன பேசணும்?''

''மொதல்ல ஏதாவது ஆர்டர் பண்ணுங்க. சாப்பிட்டுகிட்டே பேசலாம்.''

''நீயே ஆர்டர் பண்ணு'' விவேக் சொல்ல அவள் மெனு கார்டை எடுத்துப் பார்த்துவிட்டு சற்றுத்தள்ளி ஓரமாய் நின்றிருந்த பேரரைக் கையசைத்துக் கூப்பிட்டாள். பேரர் வேக நடையில் வந்தான்.

''எஸ் மேடம்...''

''டூ மல்டி வெஜிடபிள்ஸ் சூப் வித் பட்டர் அண்ட் பெப்பர்.''

''ஒகே மேடம்!'' பேரர் சொல்லிவிட்டு நகர்ந்ததும் விவேக் கேட்டான். ''சூப் வந்த பின்னாடி பேசலாமா?.......இப்பவே பேசலாமா?''

''சூப் வர்ற வரைக்கும் இதைப் பார்த்துட்டு இருங்க.'' சொன்னவள் தன் கையில் வைத்து இருந்த ஒரு துண்டு சீட்டை நீட்டினாள்.

விவேக் வாங்கிப் பார்த்தான்.

துண்டு சீட்டில் சில எண்கள் தெரிந்தது.

311=22=013

அந்த எண்களையே சில விநாடிவரை பார்த்துக் கொண்டிருந்த விவேக் அவளிடம் நிமிர்ந்தான்.

''என்ன இது?''

''இந்த எண்களைப் பார்த்தா உங்களுக்கு என்ன தோணுது?''

''உடனடியாய் ஒண்ணும் தோணலை!''

''சூப் வர்ற வரைக்கும் அதையே பார்த்துட்டிருங்க. உங்களால அது என்னான்னு கண்டுபிடிக்கமுடியும்ன்னு நினைக்கிறேன். இது ஒரு டெலிபோன் எண் கிடையாது. பேக்ஸ் நெம்பர் கிடையாது.''

''அப்புறம்?''

''அதுக்குள்ளே ஒரு விபரீதம் இருக்கு.''

''யூ மீன்?''

''சூப் வர்ற வரைக்கும் உங்களுக்கு அவகாசம் இருக்கு... நீங்க ஒரு திறமையான க்ரைம் ப்ராஞ்ச் ஆபீஸர். உங்களால கண்டு பிடிக்க முடியும்.''

விவேக் அந்த எண்களை மறுபடியும் பார்த்தான். மூளைக்குள் மின்சாரம் ஓடியது.

'இதற்குள் என்ன விபரீதம்?'

'இது ஒரு டெலிபோன் எண் கிடையாது... ஃபேக்ஸ் எண் கிடையாது என்று சொல்லிவிட்டாள். செல்போன் எண்ணாக இருக்க வாய்ப்பில்லை.

அதற்கு பத்து இலக்கம் வேண்டும்.!'

அவள் உதடுகளில் இப்போது ஒரு புன்னகை.

''மிஸ்டர் விவேக்! கேட் வே ஆஃ இண்டியாவில் உங்களை நான் பார்ப்பேன்னு கொஞ்சமும் நினச்சுப் பார்க்கலை. அந் இடத்திலேயே உங்களை சந்திச்சுப் பேச முயற் பண்ணினேன். சூழ்நிலை எனக்கு சாதகமா இல்லாததினால அது என்னால முடியாம போயிடுச்சு...''

''உம் பேர் என்ன...?''

''தன்யா.''

''பார்த்தா வடக்கத்திப் பொண்ணு மாதி இருக்கே! தமிழ் சுத்தமா பேசறே?''

''கும்பகோணத்துல பொறந்துட்டு தமி பேசாமே இருக்க முடியுமா...?''

''மும்பையில் என்ன பண்றே?''

தன்யா பதில் சொல்வதற்குள் விவேக்கி செல்போன் வைப்ரேஷனில் 'ப்ர்ர்ர் ப்ர்ர்ர்' என்ற அழைத்தது.

எடுத்துப் பார்த்தான்.

மஹாராஷ்ட்ரா டி.ஜி.பி சௌத்ரி.

செல்போனை எடுத்து காதுக்கு பொருத்தி மெள்ள குரல் கொடுத்தான் ''குட் ஈவினிங் ஸார்!''

''குட் ஈவினிங் மிஸ்டர் விவேக். உங்களோடு ஒரு விஷயத்தை பரிமாறிக்கொள்ள வேண்டும் பக்கத்தில் யாராவது இருக்கிறார்களா?''

''ஆமாம்...''

''கொஞ்சம் தனியாய் வந்து பேச முடியுமா?''

''எஸ்...ஸார்!'' தலையாட்டிய விவே நாற்காலியினின்றும் எழுந்தான்- ''ஒரு நிமிஷ தன்யா!''

''நோ ப்ராப்ளம். நீங்க பேசிட்டு வாங்க. நான் வெயிட் பண்றேன்.''

விவேக் ரெஸ்டாரெண்ட்டின் கண்ணாடி கதவைத் திறந்து கொண்டு காரிடர்க்கு வந்தான் செல்போனுக்கு உதட்டைக் கொடுத்தான்.

''ஸார்! இப்போது நீங்கள் பேசலாம். எனக்குப் பக்கத்தில் யாரும் இல்லை...''

''மிஸ்டர் விவேக்! சரண் அத்வாலே கொலை

செய்யப்பட்ட விவகாரத்தில் ஒரு புதிய சிக்கல்.''

''என்ன ஸார்?''

''கொடூரமான முறையில் கொலை செய்யப்பட்டு உடம்பை எட்டு துண்டுகளாக்கி புதைக்கப்பட்ட சரண் அத்வாலேவின் உடம்பு பாகங்களை பயோ மெட்ரிக் முறையில் ரீ-போஸ்ட்மார்ட்டம் செய்து பார்த்த போது ஒரு அதிர்ச்சியான தகவல் வெளியாகியிருக்கிறது.''

''என்ன தகவல் ஸார்?''

''டி.என்.ஏ.க்கள் வேறுபட்டிருக்கிறது.''

''அது...எப்படி ஸார்...? ஒரு உடம்பை மரபணு சோதனைக்கு உட்படுத்திப் பார்த்தால் ஒரே மாதிரியான டி.என்.ஏ.க்கள்தானே இருக்க வேண்டும்?''

''யூ ஆர் கரெக்ட்.... ஆனால் சரண் அத்வாலேவின் விவகாரத்தில் இரண்டு வகையான டி.என்.ஏ.க்கள் தென்பட்டிருக்கிறது.''

''அப்படியானால் கொலை செய்யப்பட்டது சரண் அத்வாலே மட்டும் இல்லை. கூடவே இன்னொரு நபரும். இல்லையா ஸார்?''

''மே...பி... அந்த இன்னொரு நபரின் உடல் துண்டுகளில் ஒன்று எப்படியோ சரண் அத்வாலேவின் வெட்டப்பட்ட உடம்புத்துண்டுகளை புதைக்கும் போது கலந்து விட்டிருக்கலாம்...''

''ஸார்! இன்னொரு நபர் கொலை செய்யப்பட்டிருந்தால் அந்த நபரோட உடல் துண்டுகள் எங்கே?''

''வேறே எங்கேயாவது புதைக்கப்பட்டு இருக்கலாம்.''

''ஸார்! இந்த விஷயம் எப்போது உங்களுக்குத் தெரியும்?''

''பத்து நிமிஷத்துக்கு முன்பு தான்...!''

''ஓ.கே...ஸார்...! நான் இன்னும் ரெண்டு மணி நேரத்திற்குள் உங்களுக்கு முன்பாய் இருப்பேன்.''

''ப்ளீஸ்...! வாருங்கள்... இந்த விவகாரத்தை நாம் இன்னமும் விரிவாய் பேச வேண்டியுள்ளது.''

விவேக் செல்போனை அணைத்து பாக்கெட்டுக்குள் போட்டபடி திரும்ப முயன்ற விநாடி


லேசாய் திடுக்கிட்டான்.

தடித்தடியான உடம்புகளோடு சபாரி மாதிரியா உடை அணிந்த இரண்டு பேர் அவனை நெருக்கி கொண்டு நின்றார்கள். அவர்கள் விட் மூச்சுக்காற்றில் விஸ்கி நெடி.

'யார்...நீங்க...?' என்று கேட்க நினைத்த விநா விவேக்கின் பிடரியில் ஒருவனின் கை மூர்க்கத்தனமாய் பதிந்து அழுத்தியது. விவேக் திமி முயல இன்னொருவனின் கை தலையைப் பற்றியது விவேக்கின் இடுப்பில் மறைவாய் இருந்த ரிவால்வ விநாடி நேரத்தில் பறிக்கப்பட்டது.

விடுவித்துக் கொள்ள முயன்றான். உடம்பையு தலையையும் ஒரு மில்லி மீட்டர் கூட அசைக்க முடியவில்லை.

'யார் இவர்கள்?'

'என்னைப் பின்தொடர்ந்து வந்தார்களா இல்லை அந்தப் பெண்ணை பின்தொடர்ந்து வந்தார்களா?'

'ஒவ்வொருத்தனும் 100கிலோவுக்குமேல் இருப்பார்கள். இரும்பு உலக்கையா... இல்லை... கையா?'

'காரிடரில் யாரும் இல்லை போலிருக்கிறது?'

விவேக்கின் தலையையும் பிடரியையும் இருவரும் அழுத்திப் பிடித்துக்கொள்ள அவனுடைய முகம் இரண்டு பேர்களின் இடுப்புப்பகுதியில் நசுங்கியது.

காற்றுக்காக திணறினான். மார்பு அடைத்தது ஒருவன் ஹிந்தியில் கேட்டான். "நீ யார்... உன் பே என்ன?"

அந்த இக்கட்டான நிலைமையிலும் விவேக்கின் மனசுக்குள் சின்னதாய் ஒரு சந்தோஷம்.

'இவர்களுக்கு நான் யார் என்று தெரியவில்லை!'

பிடரி இன்னமும் அழுத்தப்பட்டது. மரணவலி.

"சொல்...! நீ யார்...? உன் பேர் என்ன?" இன்னொருவன் ஆங்கிலத்தில் கேட்டான்.

"நா... நான் அமர்....."

"அந்தப் பெண் தன்யா உனக்கு எப்படி பழக்கம்?"

"ஃப்ரண்ட்..."

''நீ சொன்ன இரண்டும் பொய்! நீ அமர் கிடையாது. விவேக். தமிழ்நாடு க்ரைம்ப்ராஞ்ச் ஆபீஸர். தன்யா உனக்கு ஃப்ரண்ட் கிடையாது. இன்றைக்குத்தான் நீ அவளை முதல் முதலாய் பார்க்கிறாய்!''

விவேக் திடுக்கிட்டான். 'எமகாதகர்கள்! எல்லாம் தெரிந்து வைத்து இருக்கிறார்கள்!'

''இனி...நீ பொய் பேசினால் உயிரோடு இருக்க மாட்டாய். சொல்! தன்யா உன்னை இந்த ரெஸ்டாரெண்ட்டுக்கு வரச் சொன்னாளா?''

''ஆமாம்.''

''அவள் உன்னிடம் என்ன சொன்னாள்?''

''ஒன்றும் சொல்லவில்லை.''

''மறுபடியும்...பொய்.''

''என்னை நம்பு...! நாங்கள் இன்னமும் பேச ஆரம்பிக்கவில்லை. வந்ததும் சூப் ஆர்டர் பண்ணினாள். அதற்குள் எனக்கு செல்போன் அழைப்பு வரவும் பேசுவதற்காக வெளியே வந்துவிட்டேன்.''

''அவள் உன்னிடம் ஏதோ துண்டு பேப்பர் கொடுத்த மாதிரி இருந்தது.''

''இல்லையே...!''

''நாங்கள் பார்த்தோமே?''

விவேக் முனகினான். ''அவளிடம் துண்டு பேப்பர் இருந்து இருக்கலாம். அதை அவள் என்னிடம் தரவில்லை.''

''ரபி! இவன் பொய் சொல்கிறான்.. என்ன பண்ணலாம்?''

''இங்கே இருக்கிற வரை இப்படித்தான்! நம்முடைய இடத்துக்கு கொண்டு போய் விட்டால் உண்மைகள் தானாய் வெளியே வந்துவிடும்.....''

''நம்முடைய வேனுக்குத் தள்ளிக் கொண்டு போய்விடலாம்!'' அவன் சொல்லிக் கொண்டிருக்கும் போதே விவேக்கின் நடு மார்பில் எதுவோ இடறியது. காதருகே மற்றவனின் குரல் ஒலித்தது.

''இப்போது பிஸ்டலின் வாய் உன்னுடைய் முதுகை முத்தமிட்டுக்கொண்டு இருக்கிறது. உன்னை இப்போது ரெஸ்டாரெண்ட்டுக்கு வெளியே

இருக்கும் எங்களுடைய வேனுக்கு கூட்டிக் கொண்டு போகப் போகிறோம். காரிடரில் நீ நடக்கும் பொழுது இயல்பாய் இருக்கவேண்டும். நீ எங்களைத் தாக்க நினைக்கிற விநாடியே உன் முதுகில் தோட்டா பாயும்.''

''புரிகிறது!''

''நட...!''

இருவரும் பிடிகளைத் தளர்த்த விவேக்கின் நுரையீரலும், இருதயமும் பழைய நிலைமைக்குத் திரும்பியது. பிடரியில் இன்னமும் வலி. இவர்களுக்கு வர்மக்கலை தெரிந்து இருக்கிறது.

மூன்று பேரும் காரிடரில் ஏதோ நண்பர்களைப் போல் நடந்தார்கள்.

ரெஸ்டாரெண்ட்டின் கதவைக் கடக்கும் பொழுது விவேக் ஏதேச்சையாய் பார்வையை உள்ளே கொண்டு போய் தான் முன்பு உட்கார்ந்திருந்த மேஜையைப் பார்த்தான்.

தன்யா அங்கே இல்லை.

'இவர்களைப் பார்த்ததும் தப்பிவிட்டாள் போலிருக்கிறது!'

ரெஸ்டாரெண்ட்டை விட்டு வெளியே வந்தார்கள். நன்றாக இருட்டியிருந்தது. கொஞ்சம் தொலைவில் தெருவிளக்கு எரியாத ஒரு இடத்தில் வேன் ஒன்று சாதுவாய் நின்றிருந்தது. கொஞ்சம் திமிறினாலும் சுட்டுத் தள்ளிவிடுவார்கள் போலிருந்தது. விவேக் நல்ல பிள்ளையாய் நடந்தான்.

'யார் அந்த தன்யா?'

'யார் இவர்கள்?'

'அது என்ன நெம்பர்? 311=22=013'

'இந்த எண்ணுக்குள் என்ன விபரீதம்?'

இரண்டு நிமிட நடையில் வேனை நெருங்கியிருந்தார்கள்.

விவேக் பார்வையை உன்னிப்பாக்கினான்.

வேனின் ட்ரைவிங் இருக்கையில் ஒருவனின் மொட்டைத்தலை தெரிந்தது. அவர்களைப் பார்த்ததும் வேனின் பின்பக்கக் கதவைத் திறந்துவிட்டான்.

விவேக்கின் முதுகில் பிஸ்டலின் நுனி

இம்சையாய் குத்தியது.

''உள்ளே போய் உட்கார்''

அரையிருட்டான வேனுக்குள் விவேக் நுழைந்தான். பின் சீட்டின் ஓரத்தில் யாரோ உட்கார்ந்திருப்பது தெரிந்தது.

உற்றுப் பார்த்தான்.

தன்யா.

கடலில் உருவாகும் புயலை தமிழில் 'புயல்' என்ற ஒரே பெயரில்தான் அழைக்கிறோம். ஆனால் ஆங்கிலத்தில் சைக்கிலோன், டெம்ப்டஸ்ட், டைபூன், ஹரிக்கேன் என்று அது பல பெயர்களால் அழைக்கப்படுகிறது. வங்கக்கடல் உட்பட இந்து மகா சமுத்திரத்தில் உருவாவது சைக்கிலோன் என்றும் பசிபிக் கடலில் உருவாகும் புயலை டைபூன் என்றும், அட்லாண்டிக் கடலில் உருவாகும் புயலை ஹரிக்கேன் என்றும் அழைக்கிறார்கள். இந்த பூமி உருண்டையில் நம் இந்தியா பூமியின் நடுப்பகுதியான பூமத்திய ரேகைக்கு சற்று வடக்கே இருக்கிறது. பொதுவாக பூமத்திய ரேகை பகுதியில் புயல் உண்டாவது இல்லை. அதன் வடபகுதி அல்லது தென்பகுதியில் உள்ள கடல் நீர் வெப்பமடைவதைப் பொறுத்து புயல் சின்னம் உருவாகும். தென்பகுதிகளில் உருவாகும் புயல்கள் தன்னைத்தானே வலது பக்கமாய் சுற்றிக் கொள்ளும். ஆனால் வடக்குப்பகுதியில் உருவாகும் புயல்கள் இடது பக்கமாய்ச்சுற்றிக் கொள்ளும்.



'தன்யா தானா?'

விவேக் தன் பார்வைக்கு ஒரு லேசரின் உன்னிப்பைக் கொடுத்தான். பார்த்தான்.

'அவள்தான்!'

'சந்தேகம் இல்லை'

தன்யா பின் சீட்டில் சரிந்த மாதிரி உட்கார்ந்திருந்தாள். உடம்பில் அசைவில்லை. தலை

சற்றே தொய்ந்து தெரிந்தது.

'கொன்று விட்டார்களா?'

''என்ன பார்க்கிறாய்.... உன்னுடைய ஃப்ரண்ட்தான். தன்யா'' ஒருவன் சொல்லிக் கொண்டே தன் பாறை போன்ற உடம்பை விவேக்கின் மீது தேய்த்துக் கொண்டே உட்கார்ந்தான். வேன் உடனே புறப்பட்டது.

விவேக்கின் காதருகே அவன் விஸ்கி நெடியோடு பேசினான். ''உன்னுடைய ஃப்ரண்ட் எங்களைப் பார்த்ததும் ரெஸ்டாரெண்டின் பின்பக்கமாய் ஓட முயற்சி செய்தாள். எங்களுடைய ஆட்கள் மடக்கி வேனுக்கு கொண்டு வந்துவிட்டார்கள். பயத்தில்- அதிர்ச்சியில் இப்போது அவள் மயக்கம். அவளுக்கு நினைவு திரும்பியதும் கொன்றுவிடுவோம்.''

விவேக் அவளையே பார்த்தான்.

''என்ன பார்க்கிறாய்....? உனக்கும் அவளுடைய கதிதான்.''

விவேக்கின் அடி மனதில் லேசாய் ஒரு பயம் பென்ஸில் கோடு போட்டது. 'தனியாய் வந்தது தப்பு!'

'டி.ஜி.பி. சௌத்ரிக்கு தகவல் கொடுத்துவிட்டு வந்திருக்க வேண்டும்!' கையில் வைத்து இருந்த துப்பாக்கியால் அவன் விவேக்கின் நெற்றியிலும், கன்னத்திலும் கோலம் போட்டான். வேன் தலைதெறிக்க ஏதோ ஒரு தெருவில் ஓடிக்கொண்டிருந்தது. விவேக் துணிச்சலை வரவழைத்துக் கொண்டு கேட்டான். சிறிது சிதிலமான இந்தி.

''உனக்கு என்ன வேண்டும்?''

''உண்மை.''

''என்ன உண்மை?''

''இந்த தன்யா உன்னிடம் என்ன சொன்னாள்?''

''அதுதான் சொன்னேனே...! அவள் என்னிடம் பேச ஆரம்பிப்பதற்குள் எனக்கு போன் அழைப்பு வந்துவிட்டது.''

''அவள் உன்னிடம் எந்த துண்டு சீட்டும் தரவில்லை?''

''இல்லை...''

விவேக்கின் உதட்டோரம் பளீரென்று ஒரு அறை விழுந்து வாய்க்குள் ரத்தம் கொப்பளித்து உப்புக் கரித்தது.

அடிக்க ஆரம்பித்துவிட்டார்கள்.

'என்ன செய்யலாம்?'

'எதிர்ப்பதில் பிரயோஜனமில்லை. மொத்தம் மூன்று பேர். சினிமா ஹீரோ போல் எல்லாம் சண்டை போட முடியாது. என்னுடைய துப்பாக்கியும் இப்போது இந்த தடியன் கையில். ஏதாவது ஒரு பொய் சொன்னால்தான் மேற்கொண்டு ரத்தம் சிந்தாமல் இருக்க முடியும்.'

விவேக் செயற்கையாய் முனகினான்.

''என்னை அடிக்க வேண்டாம். உண்மையைச் சொல்லி விடுகிறேன்''

''சொல்....!''

''இந்த தன்யா என்னிடம் சில எண்களைச் சொன்னாள்.''

''என்ன எண்கள்?''

''எனக்கு ஞாபகம் இல்லை. அந்த எண்களைச் சொல்லிக் கொண்டிருந்தபோதுதான் எனக்கு செல்போன் அழைப்பு வந்தது.''

விவேக்கின் பின் மண்டையில் இப்போது தடியன் கையிலிருந்த ரிவால்வர் மெல்ல ஊர்ந்தது. ''உனக்கு இன்னும் ஐந்து நிமிஷம் அவகாசம். அதற்குள் அந்த எண்கள் உன்னுடைய ஞாபகத்துக்கு வரவேண்டும். இல்லாவிட்டால் இந்த துப்பாக்கிக்குள் இருக்கும் தோட்டாக்கள் உன்னுடைய தலைக்குள் இருக்கும்.''

'இவர்கள் ஒரு முடிவுக்கு வந்துவிட்டார்கள்!'

'அது என்ன எண்கள்? 311 அப்புறம் 22.... அப்புறம் 013''

'இந்த எண்களை இவர்களிடம் சொல்லலாமா வேண்டாமா?'

'இந்த எண்களுக்குள் ஏதோ விபரீதம் இருப்பதாய் இந்த தன்யா சொன்னாளே?'

விவேக் யோசித்துக் கொண்டிருக்க வேகமாய் சென்று கொண்டிருந்த வேன் இப்போது வேகம் குறைந்தது. பிறகு நின்றது.

சற்றே பதட்டத்தோடு - அவர்கள் இந்தியில்

பேசிக்கொண்டார்கள்.

''என்னாச்சு?''

''ட்ராஃபிக் ஜாம் மாதிரி தெரியுது.''

''வேனைத் திருப்பிகிட்டு போயிடலாமா?''

''வேண்டாம்..... வண்டிகள் மூவ் ஆகுது..... போயிடலாம். நம்ம வேனை ரிவர்ஸ் எடுக்க முடியாது. பின்னாடி ஒரு லாரி நிக்குது.''

துப்பாக்கி பேர்வழி விவேக்கின் தலையில் தட்டினான்.

''குனி! நான் சொல்கிறவரை தலையை நிமிர்த்தக் கூடாது. எதுவும் பேசக்கூடாது.''

விவேக் அவனுடைய வார்த்தைக்குக் கட்டுப்பட்டு குனிந்தான்.

''இன்னும் குனி!'' தலையைப் பிடித்து அழுத்தினான்.

விவேக்கின் கழுத்தெலும்பு ஒரு மரணவலிக்கு உட்பட்டது. முகம் சீட்டுக்கும் கீழே இருட்டுக்குள் போயிற்று. காற்று நாறியது. தீய்ந்து போன ரப்பர் வாசனை. கொசு ஒன்று மூக்கின் மேல் உட்கார்ந்துவிட்டு பறந்தது.

'துப்பாக்கித் தடியன் ஐந்து நிமிஷம் அவகாசம் கொடுத்திருக்கிறான்.'

'அதற்குள் தப்பிக்க வேண்டும்!'

'முடியுமா?'

வேன் ஏதோ மாப்பிள்ளை ஊர்வலத்து கார் போல் மெதுவாய் ஊர்ந்து கொண்டிருந்தது.

விவேக்கின் தலை திருப்ப முடியாத அளவுக்கு சீட்டுக்கு கீழே இருட்டில் திணிக்கப்பட்டு இருந்தது. ஒரு நிமிஷ நேரத்திற்குள் அந்த இருட்டு பழகிவிட பார்வை உன்னிப்பாயிற்று. விரிக்கப்பட்டு இருந்த ரப்பர் சீட்டும், முன்சீட்டுக்கு அடியில் சுருட்டி வைக்கப்பட்டு இருந்த ஒரு ப்ளாஸ்டிக் கேரி பேக்கும் விவேக்கின் பார்வையில் இடறியது.

'அது என்ன ப்ளாஸ்டிக் கேரி பேக்?'

விவேக் தன் வலது கையைக் கொஞ்சம் கொஞ்சமாய் அந்தப் பையை நோக்கி நகர்த்திப் போய் அதைத் தொட்டான். கடினமாய் இருந்தது. சத்தம் எழுப்பாமல் கையை உள்ளே விட்டான். தடவினான்.

மூளைக்கு உடனே உறைத்தது.

இது டூல்ஸ். சின்ன ஸ்பேனர் முதல் பெரிய ஸ்பேனர் வரை கைக்குத் தட்டுப்பட்டது. இன்னும் தேடினான்.

பத்து விநாடிகள்தான்.

இரண்டு கிலோ எடையில் கனமான அந்த பைப் ஸ்பேனர் ஒரு அடி நீளத்தில் வாகாய் கைக்குக் கிடைக்க அதை கெட்டியாகப் பிடித்துக்கொண்டான்.

'இனி இதுதான் என்னுடைய ஆயுதம்!'

துப்பாக்கி பேர்வழியின் கை இன்னமும் விவேக்கின் தலையை இரும்புப் பிடியாய் அழுத்திப்பிடித்து இருந்தது. மெதுவாய் ஊர்ந்து கொண்டிருந்த வேன் இப்போது கொஞ்சம் கொஞ்சமாய் வேகம் பிடித்து சீற ஆரம்பித்து இருந்தது.

கழுத்தைப் பிடித்திருந்த அவனுடைய கை தளரும் விநாடிகளுக்காகக் காத்திருந்தான் விவேக்.

ஒரு நிமிஷ நேரத்திற்குப் பிறகு அவனுடைய கை மெதுவாய் நெகிழ்ந்தது. ''இதோ பார்! இரண்டு நிமிஷம் ஓடிவிட்டது. இன்னும் உனக்கு மூன்று நிமிஷம் தான் அவகாசம். இந்த அவகாசத்துக்குள் நீ தன்யா எது மாதிரியான எண்களைச் சொன்னாள் என்பதை சொல்லியாக வேண்டும். என்ன?''

''ம்...ம்...ம்'' முனகினான் விவேக்.

''இனி நிமிர்ந்து உட்கார்.....'' விவேக்கின் கழுத்தின் மேல் வைத்து இருந்த கையை அவன் இன்னமும் தளர்த்த -

ஒரு புயலின் சீற்றத்தோடு நிமிர்ந்த விவேக் தன் வலது கையில் வைத்து இருந்த பைப் ஸ்பேனரால் துப்பாக்கி பேர்வழியின் நடு முகத்தை 'ர்ர்ரப்ப்' பென்று ஆவேசமாய் நொறுக்கினான்.

''ஹக்க்''- மூக்கின் சில்லுத்தண்டு உடைந்திருக்கவேண்டும். இளம் சூடாய் ஒரு ரத்தத்துளி விவேக்கின் முகத்தில் தெறித்தது.

''எ...எ...என்னாச்சு?''

வேனை ஓட்டிக் கொண்டிருந்தவனும், அவனுக்குப் பக்கத்தில் உட்கார்ந்திருந்தவனும் ஒரே விநாடியில் திரும்பிப் பார்க்க, விவேக் அதே பைப் ஸ்பேனரால் வீறினான். 'த்தட்...த்தட்'





இரண்டு பேரின் பின் மண்டைகளும் செமத்தியாய் அடி வாங்க- பொறி கலங்கிப் போனார்கள்.

வேன் கிறீச்சிட்டு நின்றது.

விவேக் மறுபடியும் துப்பாக்கிப் பேர்வழியை பைப் ஸ்பேனரால் தாக்க அவனுடைய தாடைப்பகுதி ரத்தக் களறியாயிற்று. அவன் நிலைகுலைந்த விநாடி அவனுடைய கைவிரல்களுக்கு கட்டுப்பட்டிருந்த துப்பாக்கி இப்போது விவேக்கின் கையில் முளைத்திருந்தது. மூன்று பேரில் ஒருவன் கூச்சலிட்டான்

''ரபி...! இப்போ துப்பாக்கி அவனோட கையில்...''

''முட்டாளே! அவனைத் தாக்கு...''

''மு...மு...முடியலை......'' கத்திய அவனை விவேக் கீழே தள்ள, வேனின் முன்பகுதியில் இருந்த இரண்டு பேரும் திடும் என்று குதித்து விவேக்கைத் தாக்கும் எண்ணத்தோடு வேகமாய் வர விவேக் ஒருவனின் முழங்காலைப்பார்த்து சுட்டான்.

''ட்ட்டுமீல்...!''

அடுத்த கணமே ஒருவன் சுருண்டு விழ மற்ற இரண்டு பேரும் இருட்டில் திசைக்கொருவராய் ஓட ஆரம்பித்தார்கள். உயிர்க்குப் பயந்த ஓட்டம்.

ரிவால்வரை உயர்த்திய விவேக் தனக்கு எதிர்திசையில் ஓடிக்கொண்டிருந்தவனைக் குறிபார்த்தான்.

பொதுவாக ஒரு புயலின் வலிமை என்பது புயலில் சேர்ந்துள்ள மேகத்தின் பரப்பளவு எவ்வளவு என்பதைப் பொறுத்துத்தான் கணக்கிட முடியும். 2013 அக்டோபர் முதல் வாரம் வங்கக்கடலில் ஒரு பெரிய புயல் சின்னம் உற்பத்தியாயிற்று. அந்தப் புயலின் பரப்பளவு இந்தியாவின் பரப்பளவில் பாதி என்ற அளவில் இருந்ததைப் பார்த்து நம் வானிலை அதிகாரிகள் மிரண்டு போனார்கள். ஆவேசமாகவும், ஆக்ரோஷமாகவும் இந்தியாவை நோக்கி நகர்ந்தது புயல். இந்தப் புயலுக்கு 'பைலின்'

என்று பெயரிட்டார்கள். இந்த பைலின் புயல் இந்தியாவைத்தான் தாக்கப்போகிறது என்று உறுதியானதும் நம் கப்பற்படை உயிர்ச் சேதங்களையும், பொருட் சேதங்களையும் தடுக்கத் தேவையான முன்னேற்பாடுகளைச் செய்ய ஆரம்பித்து விட்டது. தமிழ்நாட்டை நோக்கி நகர்ந்து வந்த இந்த பைலின் புயல் கடைசியில் திசை மாறி ஒடிசா மற்றும் ஆந்திரா கடற்கரையோரப் பகுதியைப் பதம் பார்த்தது. ஆயிரக்கணக்கான மரங்களையும், மின்கம்பங்களையும் 'பைலின்' புயல் சாய்ந்தது. வீட்டுக் கூரைகளைப் பிய்த்து எறிந்தது. மக்கள் பாதுகாப்பான இடங்களுக்கு அப்புறப்படுத்தப்பட்டு விட்டதால் உயிர்ச்சேதம் பெரும் அளவில் தடுக்கப்பட்டது. இதற்கு காரணம் நம் வானிலை இலாகாதான். வானிலை நிபுணர்களின் குறி தவறாத கணிப்பு பல்லாயிரக்கணக்கான உயிர்களைக் காப்பாற்றி விட்டது.




மும்பை ஐஸ் லோக் ஹாஸ்பிடல்.

ஏ.ஸி.யின் குளிர்ச்சியோடு நிசப்தமான - இரவு நேர ஐ.ஸி.யூனிட்.

ஒட்டு மொத்த ஹாஸ்பிடலின் சீஃப் டாக்டர் லலித் பட்டேலுக்கு முன்பாய் விவேக்கும் டி.ஜி.பி.சௌத்ரியும் விஷ்ணுவும் கவலையும் குழப்பமும் தோய்ந்து போன முகங்களோடு உட்கார்ந்திருந்தார்கள். டாக்டர் ஆங்கிலத்தில் நிதானமான குரலில் பேசிக் கொண்டிருந்தார்.

''முழங்காலுக்கு கீழே தோட்டா பாய்ந்த நபரின் பெயர் பிஸ்வாஸ். நாளைக்கு காலை எட்டுமணிக்குள் அவன் இயல்பாய் பேசக் கூடிய நிலைமைக்கு திரும்பிவிடுவான். ஆனால் அந்தப் பெண் தன்யாவின் நிலைமை எனக்கு

சந்தோஷத்தைக் கொடுக்கவில்லை. அவளை மயக்கத்துக்கு உட்படுத்த நைட்ராக்ஸின் என்னும் ஒரு வீரியமான மயக்க மருந்தை அவளுடைய உடம்புக்குள் செலுத்தியிருக்கிறார்கள். அதன் அளவு 50 எம்.ஜி. 40 எம்.ஜி. அளவுக்கு மேல் மருந்தின் அளவு தாண்டினால் அதில் உள்ள ரசாயனம் மூளையில் உள்ள ந்யூரான்களை சிதைத்துவிடும். தன்யாவின் தலைப்பாகத்தை ஸ்கேன் எடுத்துப்பார்த்ததில் அந்த விபரீதம் நடந்து இருப்பது தெரியவந்தது. தற்சமயம் தன்யாவின் நியூரான்களில் 20 சதவீதம் சிதைந்து போய் இருக்கிறது. இதற்கு மேல் நியூரான்கள் சிதையக்கூடாது. அந்த அபாயத்தைத்தடுப்பதற்காக ஒரு பவர்ஃபுல் எல்.எஸ்.டி. இஞ்செக்ஷனைப் போட்டிருக்கிறோம். இந்த இஞ்செக்ஷன் எந்த அளவுக்கு தன்யாவுக்கு பயன்பட்டது என்பது நாளைக் காலை ஆறுமணிக்குத் தெரியும்.''

விவேக் குறுக்கிட்டுக் கேட்டான்.

''டாக்டர்! தன்யாவுக்கு இப்போது ஏற்பட்டிருக்கும் நிலைமை போல் இதற்கு முன்பு வேறு எந்த ஒரு பெண்ணுக்காவது ஏற்பட்டு நீங்கள் ட்ரீட்மெண்ட் கொடுத்த பிறகு அந்தப் பெண் உயிர் பிழைத்து இருக்கிறாளா?''

''தன்யாவுக்கு ஏற்பட்டு இருக்கிற பிரச்னை போல் எந்த ஒரு பெண்ணும் இது வரையிலும் இங்கே அட்மிட்டானது இல்லை. தன்யாதான் முதல் கேஸ்.''

''டாக்டர்! தன்யா எப்படியாவது பிழைத்து சுய உணர்வுக்கு வர வேண்டும்.''

''என்னுடைய விருப்பமும் அதுதான். தன்யாவுக்கு நாங்கள் போட்டுள்ள எல்.எஸ்.டி. இஞ்செக்ஷன் இருபதாயிரம் ரூபாய் மதிப்புள்ளது. பலன் கிடைக்குமென்று நினைக்கிறேன்...!''

டாக்டர் சொல்லிக் கொண்டிருக்கும் போதே -

டி.ஜி.பி.யின் செல்போன் வைபரேஷனில் அவரை அழைத்தது. எடுத்து அழைப்பது யார் என்று பார்த்தார்.

மும்பை போலீஸ் கமிஷனர் வாத்வா.

''சொல்லுங்கள் மிஸ்டர் வாத்வா.''

''ஸார்...! வேனிலிருந்து தப்பியோடிய அந்த இரண்டு பேரையும் பிடிக்கமுடியவில்லை. மிஸ்டர் விவேக் சுட்டபோது குறி தவறியிருக்கலாம். தோட்டா அவர்களுடைய உடம்பில் பாய்ந்து இருந்தால் அவர்கள் தப்பி ஓடியிருக்க முடியாது.''

''மும்பையின் எல்லா புறநகர் காவல் நிலையங்களும் அலார்ட்டில் இருக்கும்படியாய் பார்த்துக் கொள்ளுங்கள். சந்தேகப்படும்படியாய் யார் பார்வைக்குத் தென்பட்டாலும் அரஸ்ட் செய்யுங்கள்.''

''அதற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்துவிட்டேன் ஸார்.''

''ஓ.கே! அந்த வேன் யாருடைய பெயரில் இருக்கிறதுஎன்பதைக் கண்டுபிடித்துவிட்டீர்களா?''

''நாட் யெட் ஸார்! வேனில் இருந்த ஆர்.சி.புஸ்தகமும் ரெஜிஸ்ட்ரேஷன் எண்ணும் போலி என்று தெரிந்துவிட்டது. வேனின் என்ஜினில் இருந்த சேஸ் நெம்பரும் சரியானபடி தெரியாத அளவுக்கு சேதப்படுத்தியிருக்கிறார்கள் ஸார்.''

''ஸோ..... வேனின் உரிமையாளர் யார் என்பதைக் கண்டுபிடிப்பது சிரமம் என்று சொல்ல வருகிறீர்கள்?''

''ஆமாம் ஸார்.....''

''நோ ப்ராப்ளம் மிஸ்டர் வாத்வா! முழங்காலுக்கு கீழே பிஸ்வாஸ் என்பவன் சுடப்பட்டு இங்கே ஹாஸ்பிடலில் அனுமதிக்கப்பட்டு இருக்கிறான். நாளைக்குக் காலையில் அவன் சுய உணர்வுக்கு வந்ததும் அவனிடம் விசாரித்தால் எல்லா உண்மைகளும் வெளியே வந்துவிடும். விவேக்கிடமிருந்து தப்பிய அந்த இரண்டு பேரையும் விடிவதற்குள் பிடிக்க முடிந்தால் தன்யாவுக்கும் அவர்களுக்கும் என்ன சம்பந்தம், விவேக் இந்த விவகாரத்தில் தலையிடக்கூடாது என்று அவர்கள் ஏன் நினைத்தார்கள் என்ற கேள்விகளுக்கு விடை கிடைத்துவிடும்.''

''எஸ்...ஸார்! அந்த இரண்டு பேரும் எப்படியும் பிடிபடுவார்கள் என்கிற நம்பிக்கை எனக்கு இருக்கிறது ஸார். போலீஸ் பேட்ரோலிங் இரவு முழுவதும் செயல்படும்!''

''குட்! ஒரு மணி நேரம் கழித்து எனக்கு போன் செய்யுங்கள். நான் ஹாஸ்பிடலில் இன்னமும் இரண்டு மணி நேரம் இருப்பேன்.''

''எஸ்...ஸார்...ஐ வில் கான்டாக்ட் யூ''

டி.ஜி.பி.யும் செல்போனை அணைத்தார் விவேக்கிடம் திரும்பினார். ''திட்டம் போட்டு அந்த மூன்று பேரும் செயல்பட்டு இருக்கிறார்கள்.''

டாக்டர் லலித் பட்டேல் எழுந்தார்.

''நீங்கள் பேசிக் கொண்டு இருங்கள் எமர்ஜென்ஸி வார்டில் இருந்து எனக்கு ஒரு எஸ்.எம்.எஸ் தகவல் வந்து இருக்கிறது. ஒரு பிரபல அரசியல் தலைவர்க்கு ஹார்ட் அட்டாக். ஆம்புலன்ஸில் கொண்டு வந்து இருக்கிறார்கள். போய் பார்த்து விட்டு வருகிறேன்.''

லலித் பட்டேல் கிளம்பிப் போய்விட விவேக் தன் கையில் வைத்து இருந்த பேனாவால் ஒரு தாளில் அந்த எண்களை எழுதினான்.

311-22-013. சௌத்ரியிடம் காட்டி கேட்டான்.

''ஸார்! இந்த எண்கள் என்னவாக இருக்கும் என்று நினைக்கிறீர்கள்...?''

''இது ஒரு டெலிபோன் எண் கிடையாது என்று அந்தப் பெண்ணே சொல்லிவிட்டாள். எந்த ஒரு வாகனத்தின் ரிஜிஸ்ட்ரேஷன் எண்களும், இப்படிப் பட்ட ஒரு வரிசையில் இருக்க வாய்ப்பில்லை.....''

விஷ்ணு குறுக்கிட்டான்.

''பாஸ்! என்னோட கெஸ் ஒர்க்கை சொல்லட்டுமா?''

''சொல்லு''

''இங்கிலீஷ் ஆல்பபடிக் எழுத்துக்களை இந்த எண்களோடு பொருத்திப் பார்த்தா என்ன? அதாவது 311 என்ற எண்ணில் இருக்கிற '3' க்கு உரிய எழுத்து C.1க்கு உரிய எழுத்து A. இந்த முறைப்படி எழுதிப்பார்த்தா நமக்குக் கிடைக்கிற வார்த்தை இதுதான்.''

ஒரு தாளில் எழுதி காண்பித்தான்.

CAA-BB-OAC

டி.ஜி.பி சௌத்ரியும், விவேக்கும் அந்த வார்த்தைகளைப் பார்த்துவிட்டு நெற்றிகளைப் பிடித்துக்கொண்டார்கள். ''புரியலையே?''

''முதல்தடவை இந்த எழுத்துக்களைப் பார்க்கும் போது ஒண்ணும் புரியாது பாஸ். ஒரு மணி நேரத்துக்கு ஒரு தடவையாவது இந்த எழுத்துக்களைப் பார்த்தால்தான் மூளைக்குள்ளே ஸ்பார்க் ஆகும் பாஸ்.''

டி.ஜி.பி. தலையாட்டினார். ''விஷ்ணு மே பி கரெக்ட். எனி ஹௌ இது ஒரு சங்கேத வார்த்தை. உடனடியாய் புரியாது. பட் ஒரு விஷயம் மட்டும் உறுதி. சரண் அத்வாலே கொடூரமான முறையில் கொலை செய்யப்பட்ட சம்பவத்துக்கும் தன்யாவுக்கும் ஏதோ ஒரு வகையில் தொடர்பு இருக்கு. அந்தக் கொலை சம்பந்தமான ஏதோ ஒரு உண்மையைச் சொல்லத்தான் தன்யா உங்ககிட்டே முயற்சி பண்ணியிருக்கா.''

விவேக் இடைமறித்தான்.

''ஸார்! அப்படி ஒரு எண்ணம் அவளுக்கு இருந்திருந்தா விஷயத்தை நேரிடையாய் சொல்லியிருக்கலாமே...? எதுக்காக இப்படியொரு சங்கேத வார்த்தை?''

''ஒரு வேளை அந்த சங்கேத வார்த்தை அவளுக்கு கூட தெரியாமல் இருக்கலாம். அதை உங்க கிட்டே சொல்லி விளக்கம் கேட்க நினைத்து இருக்கலாம்.''

''நோ ஸார்... அப்படியிருக்க வாய்ப்பில்லை.''

''எப்படி சொல்றீங்க?''

''அந்த எண்ணுக்குள்ளே ஏதோ ஒரு விபரீதம் இருக்குன்னு சொன்னாளே?''

''ஸோ... அவளுக்கு அந்த விபரீதம் என்னான்னு தெரியும்?''

''நிச்சயமாய்.''

விவேக்கின் செல்போன் ரிங்டோனை வெளியிட்டது. எடுத்தான். மறுமுனையில் ரூபலா. டி.ஜி.பி.யிடம் 'எக்ஸ்க்யூஸ் மீ' சொல்லிவிட்டு செல்போனை காதுக்கு ஒற்றினான்.

''சொல்லு ரூபி.....''

''ஹோட்டல் ரூமுக்கு எப்ப வருவீங்க?''

''ஏன்... பயம்மா இருக்கா?''

''பயம் இல்லை...... சின்னதாய் ஒரு டென்ஷன். அங்கே என்ன நிலவரம்? அந்தப் பொண்ணு தன்யா

கான்ஷியஸ்க்கு வந்துட்டாளா?''

''இன்னும் இல்லை. ட்ரீட்மெண்ட் போய்க்கிட்டிருக்கு. நிலைமை என்னான்னு நாளைக்குத்தான் தெரியும்.''

''குண்டடி வாங்கின அந்த தடியன்?''

''அவன் கான்ஷியஸ்க்கு வந்துட்டான். அனஸ்தீஷியா குடுத்த மயக்கம் இன்னமும் இருக்கு. அந்த மயக்கம் தெளிய எப்படியும் நாலு மணி நேரமாயிடும்.''

''அப்படீன்னா நீங்க நாளைக்குக் காலையில்தான் ரூமுக்கு வருவீங்க இல்லையா?''

''ஆமா...''

''சரி...! இந்த ஹோட்டலின் மானேஜர் உங்ககிட்டே பேசணும்ன்னு சொன்னார்.''

''அவர் பக்கத்துலதான் இருக்காரா?''

''ஆமா''

''என்கிட்டே என்ன பேசணும்?''

''விஷயம் என்னான்னு என்கிட்டே சொல்லலை. உங்ககிட்டதான் பேசணும்ன்னு சொன்னார்.''

''அவர்கிட்டே போனைக் குடு.''

விவேக் காத்திருக்க அடுத்த பத்தாவது விநாடி-ஹோட்டல் மானேஜரின் குரல் கேட்டது. ஆங்கிலமும் இந்தியும் கலந்து பேசினார்.

''மிஸ்டர் விவேக்! நான் துவாரகநாத். இந்த ஹோட்டலின் மானேஜர். உங்களிடம் ஒரு செய்தியை சொல்ல வேண்டியிருக்கிறது.''

''என்ன செய்தி...?''

''ஒரு மணி நேரத்துக்கு முன்பாய் ஹோட்டலின் லேண்ட்லைன் டெலிபோனுக்கு யாரோ ஒரு நபர் போன் செய்து ஒரு மிரட்டல் விடுத்து இருக்கிறான்.''

''என்ன மிரட்டல்?''

''நீங்களும் உங்களுடைய மனைவியும் உங்களுடைய உதவியாளரும் அடுத்த 24 மணி நேரத்திற்குள் இந்த மும்பையை விட்டுக் கிளம்பிவிடவேண்டுமாம். இல்லாவிட்டால்.....''

''இல்லாவிட்டால்...?''

''எங்களுடைய ஹோட்டலில் வெடிகுண்டு வெடிக்குமாம். எட்டு மாடிக் கட்டிடம் தரை மட்டமாகுமாம்.....!''

''நீங்கள் என்ன சொன்னீர்கள்?''

''அவன் என்னுடைய பதிலுக்கு காத்துக் கொண்டு இருக்காமல் இணைப்பைத் துண்டித்து விட்டான்... அவன் பேசிய எண்ணை ட்ரேஸ் செய்து பார்த்தபோது சர்ச்கேட் ரயில்வே ஸ்டேஷனுக்குப் பக்கத்தில் இருந்த டெலிபோன் பூத்திலிருந்து பேசியிருப்பது தெரிய வந்தது. பக்கத்தில் இருக்கும் போலீஸ் ஸ்டேஷனுக்கு இது குறித்து புகாரும் கொடுத்துவிட்டேன்.''

''இட்ஸ் ஓகே....! இந்த மிரட்டல் விவகாரத்தைப் பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?''

''ஸார்! இப்படியொரு வெடிகுண்டு மிரட்டல் வந்த அடுத்த நிமிஷமே நான் ஹோட்டலின் உரிமையாளர்க்கு தகவல் கொடுத்தேன். அதற்கு அவர் என்ன சொன்னார் தெரியுமா?''

''என்ன சொன்னார்?''

''வேறு வேலை ஏதாவது இருந்தால் பார்க்கச் சொன்னார். இருந்தாலும் இப்படியொரு மிரட்டல் வந்து இருப்பதை உங்களுக்குத் தெரியப்படுத்த வேண்டியது என்னுடைய கடமை. நீங்கள் மும்பையில் மேற்கொண்டு இருப்பதும், இல்லாததும் உங்களுடைய விருப்பத்தைப் பொறுத்தது. நாங்கள் உங்களை ஹோட்டல் அறையை காலி செய்யும்படி கேட்கமாட்டோம்.''

''மிக்க நன்றி!''

''உங்கள் மனைவியிடம் பேசுகிறீர்களா?''

''ஆமாம்......''

அடுத்த சில விநாடிகளில் செல்போனில் ரூபலாவின் குரல் கேட்டது.

''என்னங்க! இந்த வெடிகுண்டு மிரட்டல் விவகாரத்தை ஹோட்டல் மானேஜர் உங்ககிட்டே பேசும்போதுதான் எனக்கே தெரியும். இப்ப எனக்கு தனியாய் இருக்கு பயமாயிருக்கு. நீங்க கொஞ்சம் சீக்கிரமா வந்துட்டா பரவாயில்லை.....''

''பயப்படாதே ரூபி.....! இன்னிக்கு ராத்திரி நான் இந்த ஹாஸ்பிடலில் இருந்தாத்தான் நாளைக்கு விடியும் போது விடை தெரியாத பல கேள்விகளுக்கு பதில் கிடைக்கும்...... இன்னும் ஒரு மணி நேரத்துக்குள்ளே அந்த ஹோட்டலுக்கு போலீஸ்





பாதுகாப்பு போட்டுருவாங்க. தைரியமாய் இரு......!''

''சரிங்க!'' மறுமுனையில் ரூபலா மெள்ள முனகிவிட்டு செல்போனை அணைக்க, விவேக்கும் செல்போனை அணைத்தான்.

அதே விநாடி -

அறை வாசல் அருகே பதற்றமான முகத்தோடு அந்த நர்ஸ் பார்வைக்குக் கிடைத்தாள்.

கடலில் புயல் உருவாகும் போதே அதனுடைய வீரியம் எந்த அளவுக்கு இருக்கும் என்பதை வானிலை அதிகாரிகள் ஓரளவுக்கு கணித்து விடுகிறார்கள். வீசும் காற்று புயல் என்ற அந்தஸ்தைப் பெற வேண்டுமென்றால் அது மணிக்கு 50 கிலோ மீட்டர் வேகத்தில் வீச வேண்டும். இது மிதமான வேகம் என்பதால் சேதம் இருக்காது. எனவே இதை 1-ம் எண் புயல் என்று அழைக்கிறார்கள். புயலின் வேகம் 60 கிலோமீட்டர்க்கு மேற்பட்டு இருந்தால் அது 2-ம் எண் புயல். புயலின் வேகம் 70க்கும் 80க்கும் இடைப்பட்ட நிலையில் இருந்தால் அது 3-ம் எண் புயல். 100 க்கு மேற்பட்டு 120 க்குள் இருந்தால் அது 4-ம் எண் புயல். 200 கி.மீ. வேகத்தில் காற்று வீசினால் அது 5-ம் எண் புயல். 250 கி.மீ. வேகத்தில் வீசும் புயல்காற்றுக்குப் பெயர் சூப்பர் புயல். சூப்பர் புயல் வீசும் போதுதான் கப்பல்களும் கவிழும் அபாயம் ஏற்படும். 1960-ல் தனுஷ்கோடியில் வீசிய புயல்காற்றின் வேகம் மணிக்கு 275 கி.மீ. தனுஷ்கோடி என்னும் ஒரு ஊரே அழிந்தது இந்தப் புயலால்தான். மறக்க முடியாத புயல்.




விவேக்கை நெருங்கினாள் அந்த நர்ஸ். இந்தியில் பதட்டமாய்ச் சொன்னாள்.

''ஸார்! சீஃப் டாக்டர் உங்களை ஐ.ஸி.யூனிட்டுக்கு உடனடியாய்

வரச்சொன்னார்.''

''எனிதிங்க் இம்பார்ட்டண்ட்?''

''தெரியலை ஸார்.''

மூன்று பேரும் உடனே புறப்பட்டார்கள். நிசப்தமான அந்த நள்ளிரவு வேளையில் ஹாஸ்பிடலின் நீளமான வராந்தாக்கள் பாலைவனம் போல் வெறிச்சோடிப் போயிருக்க, வேகமாய் நடந்து ஐ.ஸி.யூனிட்டுக்கு வந்தார்கள்.

டாக்டர் லலித் பட்டேல் புன்னகை ததும்பிய முகத்தோடு தன்யாவின் கட்டில் அருகே காத்திருந்தார். விவேக்கைப் பார்த்ததும் சொன்னார்.

''கடவுள் நமக்கு சாதகமாய் இருக்கிறார் மிஸ்டர் விவேக். இட் ஈஸ் ஏ மிர்ராக்கிள்!''

''டாக்டர்! யூ மீன்?''

''நவ் தன்யா ஈஸ் ஓ.கே. ஸீம்ஸ் டு பி பெட்டர். நாங்கள் கொடுத்த எல்.எஸ்.டி. இஞ்செக்ஷனுக்கு நல்ல பலன் கிடைத்துள்ளது. தன்யாவின் ஒட்டுமொத்த மூளைப் பிரதேசமும் இப்போது மருந்தின் கட்டுப்பாட்டுக்குள் வந்து விட்டது. ந்யூரான்கள் சிதைபடுவது தவிர்க்கப்பட்டுவிட்டது. தன்யா எந்த நிமிஷமும் சுய உணர்வுக்கு வரலாம். தெளிவாய் பேச ஆரம்பிக்கலாம்...... அதாவது முழங்காலுக்கு கீழே சுடப்பட்டு ட்ரீட்மெண்ட்டில் இருக்கும் அந்த நபர் பிஸ்வாஸ் அனஸ்தீஷியா பாதிப்பிலிருந்து விடுபட்டு உங்களுடைய விசாரணைக்கு தயாராவதற்குள் தன்யா மூலமாக உங்களுக்கு எல்லா விபரங்களும் கிடைத்து விடலாம்.''

விவேக் தன்யாவுக்குப் பக்கத்தில் போய் நின்றான். அவளுடைய கண்ணிமைகளில் அசைவு இருந்தது. வலதுகை தன்னிச்சையாய் மேலே எழுந்து கீழே தாழ்ந்தது. சுவரில் பொருத்தியிருந்த வைட்டல் ஆர்கன்ஸ் சம்பந்தப்பட்ட மானிட்டர்களில் பல்ஸ் ரேட்டும், பி.பி.யின் அளவுகளும் அவளுடைய ஹெல்த் கண்டிஷனுக்கு எந்தப் பிரச்னையும் இல்லையென்று ரத்தச் சிவப்பு டிஜிட்டல் எண்களில் சொல்லிக் கொண்டிருந்தது.

டாக்டர் லலித் பட்டேல் சொன்னார்: ''மிஸ்டர் விவேக்.! தன்யா இப்போது அரைகுறையான

தூக்கத்தில் இருந்தாலும், நாங்கள் கொடுத்த உயிர் காக்கும் மருந்தின் காரணமாக அவளுடைய உடம்பில் இருக்கும் ஹார்மோன்கள் சரியான முறையில் தூண்டப்பட்டு பழைய ஆரோக்கியமான நிலைமையை நோக்கி வேகமாய் திரும்பிக் கொண்டு இருக்கிறாள். இப்படிப்பட்ட சூழ்நிலையில் தன்யாவுக்கு எந்த நிமிஷமும் சுய உணர்வு திரும்பலாம். எனவே நீங்கள் விடியும் வரைக்கும் இதே அறையில் இருக்க வேண்டியிருக்கும். நான் வேறொரு அவசர கேஸை கவனிக்க வேண்டியுள்ளது.''

''நோ ப்ராப்ளம் டாக்டர். வி வில் பி ஹியர்.....'' அந்த அறையின் சுவரோரமாய் போடப்பட்டு இருந்த நாற்காலிகளில் விவேக்கும் விஷ்ணுவும் உட்கார டி.ஜி.பி. செளத்ரி மட்டும் சில நிமிடங்கள் இருந்துவிட்டு புறப்பட்டார்.

''மிஸ்டர் விவேக்! நான் கிளம்புகிறேன். நாளைக்காலை ஆறு மணிக்கெல்லாம் சாண்டா க்ரூஸ் ஏர்போர்ட்டில் இருக்க வேண்டும். வெனிசுலா நாட்டின் அதிபர் ஜான் ஜெர்ராட் ஏழு மணி ஃப்ளைட்டில் வந்து இறங்குகிறார். பாதுகாப்பு ஏற்பாடுகளை கவனிக்க நான் அங்கே இருக்க வேண்டும்.''

விவேக் எழுந்து நின்று கை குலுக்கினான். ''நீங்கள் புறப்படுங்கள் ஸார். நான் இங்கேயிருந்து-தன்யா சுய உணர்வுக்கு வந்ததும் அவளிடம் பேசி எல்லா உண்மைகளையும் வாங்கி விடுகிறேன்...''

''ஏதாவது உதவி தேவைப்பட்டால் உடனடியாய் என்னை தொடர்பு கொள்ளுங்கள். காலில் குண்டடிபட்ட அந்த பிஸ்வாஸிடமும் ஒரு ஸ்டேட்மெண்ட் வாங்கிவிடுங்கள்.''

''எஸ்...ஸார்.''

டி.ஜி.பி செளத்ரி கிளம்பிப் போனதும் விஷ்ணு விவேக்கை ஏறிட்டான். ''பாஸ்! உங்க உதட்டோரம் வீங்கியிருக்கு. அந்த ரெண்டு பேரும் உங்களை ரொம்பவும் ஹார்ஸா தாக்கியிருக்காங்கனு நினைக்கிறேன்!.....யா பசங்க....''

''விஷ்ணு! இது ஹாஸ்பிடல்..... கெட்ட வார்த்தை பேசாதே!''

''கோபம் வருது பாஸ்...! அந்த பிஸ்வாஸ் குணமானதும் அவனை போலீஸ் லாக்கப்புக்கு கொண்டு போய் 10 மில்லி ஆம்பியர் மின்சாரத்தை அவனோட...''

''அவனோட?''

''ஆசன வாய்க்குள்ளே.....''

''டேய்...!''

''சும்மா சொன்னேன் பாஸ்...! பவர்கட் இப்படி கடுமையாய் இருக்கிற இந்த நேரத்துல போய் கரண்ட்டை வேஸ்ட் பண்ணுவேனா?''

''விஷ்ணு! அந்த எண்களைப் பத்தி யோசிச்சியா?''

''யோசிக்காமே இருப்பேனா பாஸ்.? ஏதோ ஒரு நடிகையோட உடல் அளவுகளை 34-28-36-ன்னு சொல்ற மாதிரி அது என்ன 311-22-013ன்னு என் மூளையோட ஒரு பகுதிக்கு வேலை குடுத்துட்டேதான் இருக்கேன்..... ஒண்ணும் பிடிபடலை பாஸ்.''

''என்னோட கெஸ் ஒர்க் என்னான்னு சொல்லட்டுமா விஷ்ணு?''

''சொல்லுங்க பாஸ்... நீங்க சொன்னா அது சரியாய் இருக்கும்.''

''311-22-013- இந்த எண்கள் ஏன் ஒரு மேத்தமேடிக்ஸ் ஃபார்முலாவாய் இருக்கக்கூடாது?''

''நீங்க சொன்ன மாதிரியே இது ஒரு மேத்தமேடிக்ஸ் ஃபார்முலாவாய் இருந்தாலும் இதுக்குள்ளே என்ன ஒரு விபரீதம் இருக்க முடியும் பாஸ்?''

''உனக்கு மேத்ஸ் புரபசர் யாரையாவது தெரியுமா?''

''தெரியும் பாஸ்... பேரு சிவகாம சுந்தரி. ஸ்டெல்லா மேரீஸ்ல மேத்ஸ் புரபசர். வயசு 55.''

''ஏண்டா...! இதுலகூட ஒரு ஆம்பிளையைத் தெரிஞ்சு வெச்சுக்க மாட்டியா?''

''என்னோட ஜாதகம் அப்படி பாஸ்...! நான் என்ன பண்ணட்டும்? போன மாசம் ராத்திரி மயிலாப்பூர் மாமி ஆப்பக்கடையில் சாப்டுட்டு வீட்டுக்குப் போக ரோட்ல காலியாய் போன ஒரு ஆட்டோவை நிறுத்தினேன். டிரைவரைப் பார்த்ததும்





ஆடிப் போயிட்டேன்''

''ஏன்?''

''நமீதா மாதிரியான உடம்புவாகுல ஒரு பொம்பள ட்ரைவர் பாஸ்.... எனக்கு எப்படி இருக்கும்...? அந்த ஆட்டோவில் ஏர்றதா வேண்டாமான்னு மனசுக்குள்ளே பட்டி மன்றம்''

''அப்புறம்...? அந்த ஆட்டோவை வேண்டாம்ன்னு சொல்லிட்டியா?''

''உங்கமாதிரி எனக்கு கல்லு மனசு கிடையாது பாஸ்... அந்த ஆட்டோவில்தான் வீட்டுக்குப் போனேன்.... பெண் பாவம் பொல்லாதது பாஸ்.''

''மீட்டர்க்கு மேல போட்டுக் கொடுத்து இருப்பியே?''

''ஏதோ என்னால முடிஞ்சது பண்ணினேன்.''

''சரி..... அந்த மேத்ஸ் ப்ரபசர் சிவகாம சுந்தரியோட போன் நெம்பர் உன்கிட்டே இருக்கா?''

''இருக்கு பாஸ்.....! ஆனா இந்த ராத்திரி நேரத்துல சிவகாமசுந்தரிக்கு போன் பண்ணினா அவரோட வீட்டுக்காரர்க்கு என்மேல சந்தேகம் வந்துடும்.''

''ஏண்டா! அந்த அம்மாவுக்கு வயசு அம்பத்தஞ்சுன்னு சொன்னே...? கணவர்க்கு எப்படியும் 60க்கு மேல இருக்கும். நீ பேசினா எப்படி சந்தேகம் வரும்?''

''வேண்டாம் பாஸ்.... தம்பதிகளுக்குள்ளே வீணாய் சண்டை வந்துடும். ஒரு தம்பதியை பிரிச்ச பாவம் எனக்கு வேண்டாம். நாளைக்கு காலையில் போன் பண்றேன்.''

''டேய்! இது உனக்கே கொஞ்சம் ஓவராய் தெரியலை?'' விவேக் சொல்லிக் கொண்டிருக்கும் போதே -

அறை வாசலில் ஏதோ சத்தம் கேட்டது.

விவேக்கும் விஷ்ணுவும் திரும்பினார்கள்.

காலில் போடப்பட்ட கனமான பேண்டேஜ் கட்டுடன் பிஸ்வாஸ் சக்கரநாற்காலியில் உட்கார்ந்திருந்தான். இறுகிய முகம். கண்களில் கோபம்.

இடது கையில் உடைந்த பாட்டிலும், வலது கையில் நீளமாய் ஒரு இரும்புக் கம்பியும் தெரிந்தது.

இப்போதெல்லாம் வானிலை அதிகாரிகள் ஒரு கடுமையான புயல் உருவாகிவிட்டால் அதற்கு ஒரு பெயர் வைத்துவிடுகிறார்கள். இப்படி பெயர் வைப்பதற்குக் காரணம் எந்தப் புயல் எப்படிப்பட்ட சேதங்களை ஏற்படுத்தியது என்பதைப் பிற்கால சந்ததியர் தெரிந்து கொள்ளத்தான். முதன் முதலில் 1953-ம் ஆண்டுதான் இந்தப் பழக்கம் நடைமுறைக்கு வந்தது. இதற்காக பெண்களின் பெயர் கொண்ட பட்டியலைத் தயார் செய்தார்கள். 1977-ம் ஆண்டு பெண்களின் அமைப்புகள் இதற்கு கடுமையான ஆட்சேபம் தெரிவித்தது. புயல்களுக்கு ஆண்களின் பெயர்களையும் வைக்க வேண்டும் என்று வற்புறுத்தவே வானிலை அதிகாரிகள் ஆண்களின் பெயர்களையும் பட்டியலில் சேர்த்தனர். இதற்குப் பிறகும் ஒரு பிரச்னை வந்தது. அது என்ன என்பதை 9-வது அத்தியாயத்தில் பார்ப்போம்.




விவேக்கும் விஷ்ணுவும் 'இவன் பிஸ்வாஸ்'தான் என்று ஒரு மைக்ரோ விநாடி நேரத்திற்குள் உணர்ந்து அவனை எதிர்கொள்வதற்குள் சக்கர நாற்காலியை மின்னல் வேகத்தில் உருட்டிக்கொண்டு வந்த அவன் கட்டிலில் படுத்திருந்த தன்யாவை மூர்க்கமாய் தாக்கினான். இரும்புக்கம்பி அவளுடைய நெற்றிப் பொட்டைத் தாக்க, க்ளுகோஸ் பாட்டில் எகிறிப் போய் விழுந்தது. விவேக் பெரிதாய் கத்தினான்.

''விஷ்ணு! அவனை அமுக்கு.''

''இவன் ஐ.ஸி.யூனிட்டிலிருந்து எப்படி வெளியே வந்தான் பாஸ்? ரொம்பவும் மூர்க்கமாய் இருக்கான். பக்கத்துல போகாதீங்க பாஸ். கையில் எப்படி இவ்வளவு பெரிய இரும்புக் கம்பி?''

''விஷ்ணு! பேசிட்டிருக்க நேரமில்லை... அவன்

தன்யாவை மறுபடியும் தாக்குவான் போலிருக்கு...''

விவேக் பேசிக் கொண்டிருக்கும் போதே பிஸ்வாஸ் ஆவேசத்தோடு தன் கையில் இருந்த இரும்புக்கம்பியால் தாக்க- தன்யா படுக்கையிலிருந்து உருண்டு நிலைகுலைந்து கீழே விழுந்தாள்.

விஷ்ணு பக்கத்திலிருந்த ட்ரிப்ஸ் இரும்பு ஸ்டாண்ட்டை எடுத்து பிஸ்வாஸ் மீது எறிந்தான். அது அவனை சொற்பமாய் தாக்கிவிட்டு சுவரோரமாய் போய் விழுந்தது.

''விஷ்ணு! நீ தன்யாவை கவனி. நான் இவனை மடக்கி...'' விவேக் சொல்லச் சொல்ல பிஸ்வாஸ் சக்கரநாற்காலியை வேகமாய் உருட்டிக் கொண்டு கண்ணாடிச் சுவரால் தடுக்கப்பட்டு இருந்த சிட் அவுட்டை நோக்கிப் போனான்.

விவேக் சக்கர நாற்காலியை நிறுத்த முயன்று முடியாமல் போன அந்த ஒரு விநாடியில் -

''ச்ச்சலீர்ர்ர்ர்''

சக்கர நாற்காலி ஆவேசமாய் மோதியதில் கண்ணாடிச்சுவர் சில்லு சில்லாய் சிதற, பிஸ்வாஸ் தூக்கி எறியப்பட்டு ஜன்னலுக்கு வெளியே பரவியிருந்த இருட்டு வானத்தில் கலந்து கீழ் நோக்கிப் போனான். அடுத்த ஐந்து விநாடிகளில் 'தொம்ம்ம்' என்ற சத்தம்.

விவேக் ஓடிப்போய் சுற்றுச்சுவரைப் பிடித்துக் கொண்டு கீழே எட்டிப் பார்த்தான்.

அந்த கார் பார்க்கிங் ஏரியாவில் ஏராளமான கார்கள் வரிசையாய் நின்றிருக்க ஒரு வெண்ணிற வேன் மீது கால்களையும் கைகளையும் பரப்பிக் கொண்டு ஸ்லோ மோஷனில் துடித்துக் கொண்டிருந்தான் பிஸ்வாஸ்.

''வி...விஷ்ணு.....!''

''பாஸ்!''

''நீ கீழே போய் பார்... நான் தன்யாவைப் பார்த்துக்கிறேன்.''

விஷ்ணு அறைக்கு வெளியே பாய்ந்து ஓட, விவேக் கட்டிலினின்றும் கீழே உருண்டிருந்த தன்யாவை நோக்கிப் போனான். அவளருகே மண்டியிட்டு உட்கார்ந்தான்.

தன்யா மூச்சிரைத்துக் கொண்டிருந்தாள். வலது காது அருகே ரத்தம் ஒரு நூல் போல் வழிந்து நின்றிருந்தது.

''த... த... தன்யா... தன்யா...''

விவேக் அவளுடைய கன்னங்களைத் தட்டினான். அவளுடைய தலை மூச்சிரைப்போடு ஆடியது. சுவரோரமாய் திக்பிரமை பிடித்த நிலையில் நின்றிருந்த நர்ஸைப் பார்த்து குரல் கொடுத்தான்.

''சிஸ்டா! டாக்டர்க்குத் தகவல் கொடுங்க.''

''கொ... கொ... கொடுத்துட்டேன் ஸார். அவர் வந்துட்டிருக்கார்.''

''தன்யாவுக்கு ஏதாவது ஃபர்ஸ்ட் எய்ட் பண்ண முடியுமான்னு பாருங்க.... சிஸ்டர்.''

அவள் வந்து பார்த்துவிட்டு ''ஸாரி ஸார்... தன்யாவுக்கு காதுல ரத்தம் வருது... அந்த ஆள் இரும்புக் கம்பியால் அடிச்சதால அடி எங்கே எப்படி பட்டிருக்குன்னு தெரியலை... டாக்டர் வந்துரட்டும் ஸார்.''

விவேக் பதட்டமாய் காத்திருக்க, டாக்டர் லலித் பட்டேல் ஓட்டமும் நடையுமாய் இரண்டு உதவிடாக்டர்களோடு வந்தார்.

''வாட் ஹேப்பண்ட் மிஸ்டர் விவேக்...?''

விவேக் நடந்த விபரீதத்தை சொல்லிக் கொண்டிருக்கும் போதே லலித் பட்டேல் தன்யாவை டாக்டர்களின் உதவியோடு படுக்கையில் கிடத்தி அவளை பரிசோதிக்க ஆரம்பித்து இருந்தார்.

''டாக்டர்! பிஸ்வாஸ் காவலுக்கு இருந்த கான்ஸ்டபிளையும் ஏமாத்திட்டு சக்கர நாற்காலியில் கையில் ஒரு இரும்புக்கம்பியோடு வந்திருக்கான். அவனோட கைக்கு எப்படி இரும்புக் கம்பி கிடைச்சுதுன்னு தெரியலை. நானும் விஷ்ணுவும் சுதாரிப்புக்கு வந்து அவனை மடக்கறதுக்குள்ளே தன்யாவை இரும்புக் கம்பியால் தாக்கிட்டான். நிலை குலைந்து போன தன்யா கீழே உருண்டு விழுந்த விநாடி - அவனும் சக்கர நாற்காலியை வேகமாய் உருட்டிகிட்டு போய் சிட்அவுட் கண்ணாடிச் சுவரை மோதி உடைச்சுகிட்டு கீழே விழுந்துட்டான். இந்த சம்பவம் எல்லாமே கண்ணிமைக்கிற நேரத்திற்குள்

நடந்து முடிஞ்சுருச்சு..... பிஸ்வாஸை எங்களால கட்டுப்படுத்த முடியலை.''

விவேக் சொல்வதை யெல்லாம் கேட்டபடியே தன்யாவை பரிசோதித்துக் கொண்டிருந்த டாக்டர் லலித்பட்டேல் நெற்றியில் உற்பத்தியான கவலை வரிகளோடு விவேக்கிடம் திரும்பினார்.

''சிவியர் அட்டாக்! கழுத்து எலும்பும், மூச்சுக்குழலும் பெரிய அளவில் பாதிக்கப்பட்டு ரத்தக் கசிவு ஏற்பட்டிருக்கு..... அதனுடைய அறிகுறிதான் காதுல ரத்தம். அது தவிர இரும்புக் கம்பியால தலையும் அடிபட்டிருக்கு..... ஸோ.....''

''ஸோ.....?''

''தன்யா மீறிப்போனா இன்னும் ஒரு பத்து நிமிஷம் உயிரோடு இருப்பா. ஷி ஈஸ் கவுண்ட்டிங் ஹர் லாஸ்ட் மினிட்ஸ்...''

''டாக்டர்...''

''ஸாரி மிஸ்டர் விவேக்! திஸ் ஈஸ் ஹைலி அன்பார்ச்சுனேட். தன்யா பேசக் கூடிய நிலைமையில் இருந்தும் அவளைக் காப்பாற்றத் தவறிட்டோம்.''

டாக்டர் சொன்னதைக் கேட்டு உறைந்து போன விவேக்கை அவனுடைய செல்போன் உசுப்பியது.

எடுத்தான்.

மறுமுனையில் விஷ்ணு.

''என்ன விஷ்ணு...?''

''பாஸ்! பிஸ்வாஸ் இறந்துட்டான். ஒரு மூட்டையாய் கட்ட வேண்டிய அளவுக்கு உடம்பு சேதம்......''

விவேக் நொறுங்கினான்.

*புயலுக்கு பெண்களின் பெயர்களோடு ஆண்களின் பெயர்களையும் பட்டியலில் சேர்த்துக் கொண்ட பிறகு வேறு ஒரு பிரச்னை எட்டிப் பார்த்தது. அது- ஒரு நாட்டின் கடல் பகுதியில் புயல் உருவானால் அதற்கு பெயர் வைக்கும் உரிமை சர்வதேச வானிலை நிலையத்துக்கா அல்லது அந்தக் குறிப்பிட்ட எல்லைப்பகுதியில் உள்ள நாட்டுக்கா*

என்பதுதான். இந்தப் பிரசனைக்கும் ஒரு தீர்வு கண்டுபிடித்தார்கள். அதாவது வங்கக் கடலில் உருவாகும் புயலுக்கு வைக்க வேண்டிய பெயர் பட்டியலை இந்தியா, வங்காள தேசம், மாலத்தீவு, மியான்மர், ஓமன், பாகிஸ்தான், இலங்கை, தாய்லாந்து ஆகிய 8 நாடுகள் சேர்ந்து தயாரித்துள்ளன. இதன்படி சமீபத்தில் வந்த புயலுக்கு தாய்லாந்து நாடு கொடுத்து இருந்த பைலின் என்ற பெயர் சூட்டப்பட்டது. அடுத்து ஒரு புயல் வங்கக்கடலில் உருவானால் அதற்கு வங்காள தேசம் கொடுத்த 'ஹெலன்' என்ற பெயர் தயாராய் இருக்கிறது.



மும்பை டி.ஜி.பி. அலுவலகம். காலை பதினோரு மணி.

டி.ஜி.பி. செளத்ரியின் அறைக்குள் மும்பையின் பிரதான போலீஸ் அதிகாரிகளுடன் விவேக்கும் விஷ்ணுவும் கலந்திருந்தார்கள்.

அறையில் நிலவிய கனத்த நிசப்தத்தை அறுக்கிற தினுசில் செளத்ரி கரகரப்பான ஆங்கிலத்தில் பேசிக்கொண்டிருந்தார்.

''நேற்று இரவு ஐஸ்லோக் ஹாஸ்பிடலில் நடந்த தன்யாவின் மரணமும், பிஸ்வாஸின் மரணமும் நாம் எதிர்பார்க்காதவை. மிஸ்டர் விவேக் அறையில் இருக்கும்போதே கண்ணிமைக்கிற நேரத்திற்குள் நடந்துவிட்ட துரதிர்ஷ்டவசமான சம்பவங்கள். பிஸ்வாஸ் குண்டடிபட்ட காயத்தோடு இருப்பதால் அவனால் அவ்வளவு சீக்கிரம் எழுந்து நடமாடமுடியாது என்று நாம் நினைத்தது பெரிய தவறு என்று இப்போது புரிகிறது. விவேக் காரில் கடத்தப்பட்ட பொழுது தான் தப்பிப்பதற்காக கையில் கிடைத்த பைப் ஸ்பேனரை வைத்து இரண்டு பேரின் பின் மண்டையில் தாக்கிய போதும் அவர்கள் நிலை குலைந்து விடாமல் தப்பி ஓடியிருக்கிறார்கள். காலில் தோட்டா பாய்ந்த பிஸ்வாஸும் சிகிச்சைக்குப் பிறகு

பழைய பலத்திற்கு திரும்பி சக்கர நாற்காலியின் உதவியோடு ஐ.ஸி.யூனிட்டிலிருந்து வெளிப்பட்டு தன்யாவை தீர்த்துக்கட்டிவிட்டு தானும் கண்ணாடித்தடுப்பை உடைத்துக் கொண்டு கீழே குதித்து உயிரை விட்டிருக்கிறான். தன்யா மூலம் போலீஸுக்கு எந்த ஒரு விஷயமும் போய்விடக் கூடாது என்பதில் பிஸ்வாஸ் தீர்மானமாய் இருந்து இருக்கிறான். எப்படியோ நம் கைக்குக் கிடைத்த இரண்டு பறவைகளும் இப்போது மரித்துவிட்டன. இதிலிருந்து நமக்கு ஒரு விஷயம் நன்றாக புரிகிறது. எதிரிகள் சாதாரண நபர்கள் அல்ல. ஏதோ ஒரு விபரீதமான விளைவை உருவாக்க திட்டம் தீட்டிக் கொண்டு இருக்கிறார்கள். சரண் அத்வாலே கொலை செய்யப்பட்டதும் அந்தத் திட்டத்தின் ஒரு பகுதியாக இருக்கலாம்.''

விவேக் இடைமறித்தான்.

''ஸார்! நான் இங்கே ஒரு கருத்தைப் பதிவு செய்ய விரும்புகிறேன்.''

''ப்ளீஸ் ப்ரொஸீட்......''

''சரண் அத்வாலே இந்தியாவில் இருக்கிற முதல் 100 பணக்காரர்களில் ஒருவர். அவர் ஒரு பிசினஸ் ஜெயண்ட். அவருடைய பாதுகாப்புக்காக எவ்வளவோ செக்யூர்ட்டிகள் இருந்தும் அவர் மிகவும் கொடூரமாய் கொலை செய்யப்பட்டு எட்டுத்துண்டுகளாய் வெட்டப்பட்டு அவருடைய பண்ணை பங்களாவைச் சுற்றி எட்டுத் திசைகளிலும் புதைக்கப்பட்டிருந்தார். போஸ்ட் மார்ட்டம் செய்யப்பட்ட அவருடைய உடம்புத் துண்டுகளை DNA டெஸ்ட்டுக்கு உட்படுத்திப் பார்த்த பொழுது உடம்பின் ஏதோ ஒரு பகுதி மட்டும் வேறொரு DNA வகையைச் சேர்ந்ததாய் இருந்து இருக்கிறது. இல்லையா ஸார்?''

''எஸ்..... யூ ஆர் கரெக்ட்! நான் அந்த ரிப்போர்ட்டைப் பார்த்தேன்.''

''அந்த ரிப்போர்ட்டை அடிப்படையாய் வைத்துக் கொண்டு பார்த்தால் சரண் அத்வாலேயுடன் சேர்ந்து இன்னொரு நபரும் கொலை செய்யப்பட்டு இருக்க வேண்டும் இல்லையா ஸார்?''

''எஸ்...''

''கொலை செய்யப்பட்ட அந்த இன்னொரு நபர் யாராக இருக்கும் என்கிற கேள்விக்கு மும்பை போலீஸிடம் பதில் இருக்கிறதா ஸார்?''

''இல்லை. அதைக் கண்டுபிடிக்கும் விதமாக விசாரணை நடந்து கொண்டு இருக்கிறது. சரண் அத்வாலேயின் மகன் மஹி அத்வாலேவிடமும் விசாரணை நடத்தப்பட்டது.''

''மஹி அத்வாலே என்ன சொன்னார்?''

''தன் அப்பாவோடு சேர்த்து கொலை செய்யப்பட்ட நபர் யாராக இருக்கும் என்கிற கேள்விக்கு அவரால் பதில் சொல்ல முடியலை. தனக்குத் தெரியாது என்று சொல்லிவிட்டார்.''

''அதை மும்பை போலீஸ் நம்பிவிட்டதா?''

''மிஸ்டர் விவேக்! வாட் டூ யூ மீன்.....? மஹி அத்வாலேவுக்குத் தெரியாது என்றால் அவர் தெரியாது என்றுதானே சொல்வார்?''

''அவர் ஏன் பொய் சொல்லி இருக்கக் கூடாது?''

''பொய்யா? அவர் எதற்காக பொய் சொல்ல வேண்டும்? தன் அப்பாவின் கொடூர மரணத்தால் மஹி அத்வாலே நிலை குலைந்து போயிருக்கிறார். கொலையாளி யார் என்பதைக் கண்டுபிடிக்கும் விஷயத்தில் மும்பை போலீஸுக்கு அவர் நல்ல முறையில் ஒத்துழைப்பு கொடுத்து வருகிறார். நீங்கள் மும்பை வந்த நாளன்றே நானும் நீங்களும் மஹி அத்வாலேவை நேரில் போய்ப் பார்த்து பேசினோம்... நீங்களும் அவரிடம் ஒரு மணி நேரத்துக்கு மேலாக விசாரணை நடத்தினீர்கள். அவர்க்கு... ஆறுதல் சொன்னீர்கள். மீடியாக்களுக்கு விஷயம் போவதற்கு முன்பாக கொலையாளியைக் கண்டுபிடித்துவிடலாம் என்று உறுதியளித்தீர்கள்.''

''ஆமாம்! நான் அதை மறுக்கவில்லை. நான் மஹி அத்வாலேவை சந்தித்து மூன்று நாட்களுக்கு மேல் ஆகிவிட்டது. நான் அவரை சந்தித்த போது DNA ரிப்போர்ட் வரவில்லை. இரண்டு நாட்களுக்கு முன்புதான் ரிப்போர்ட் வந்தது. இன்னொரு நபர் கொலை செய்யப்பட்டு இருக்கலாம் என்கிற உண்மையும் வெளியே வந்தது.''

''மிஸ்டர் விவேக்! நீங்கள் இப்போது என்ன சொல்ல வருகிறீர்கள்?''

''சரண் அத்வாலேயுடன் சேர்ந்து கொலை செய்யப்பட்ட நபர் ஆணா.....பெண்ணா?''

''ஆண் என்றுதான் ரிப்போர்ட்டில் குறிப்பிடப்பட்டு இருக்கிறது.''

''டி.என்.ஏ. ரிப்போர்ட் கொடுத்த ஜீன் ரிசர்ச் ஸ்காலர் யார்?''

''மிஸ்டர் சுனில் யாதவ்.''

''சுனில் யாதவ்வின் ரிப்போர்ட் சரியாக இருக்கும் என்று நினைக்கிறீர்களா?''

''அதில் என்ன சந்தேகம்..? டி.என்.ஏ. சம்பந்தமாய் இதுவரைக்கும் அவர் கொடுத்த எல்லா ரிப்போர்ட்களும் துல்லியமாய் இருந்து இருக்கிறது.''

விவேக்கின் உதடுகளில் ஒரு புன்முறுவல் அரும்பியது. டி.ஜி.பியின் புருவங்கள் சற்றே உயர்ந்தது.

''இந்த புன்சிரிப்புக்கு என்ன அர்த்தம் என்று நான் தெரிந்துகொள்ளலாமா....?''

''ஸார்! இப்போது நான் உங்களுக்கு ஒரு கசப்பான உண்மையைச் சொல்லப் போகிறேன்.''

''கசப்பான உண்மையா?''

''ஆமாம்... சரண் அத்வாலேவின் வெட்டுப்பட்ட துண்டுகளோடு இன்னொரு நபரின் உடல் துண்டுகளும் இருந்தது. அது ஆண் என்று சுனில் யாதவ்வின் ரிப்போர்ட் சொல்கிறது. ஆனால் அது ஆண் அல்ல; ஒரு பெண்.''

டி.ஜி.பி.யின் சதைப்பிடிப்பான முகம் எல்லாப் பக்கமும் அதிர்ந்தது. கண்கள் விரிந்து உதடுகள் தன்னிச்சையாய் வார்த்தைகளை உதிர்த்தது.

''பெ...பெ...பெண்ணா?''

''ஆமாம்.''

''அது பெண் என்று உங்களுக்கு எப்படி தெரியும்?''

''நம்பிக்கைக்குரிய ஒரு நபர் சொன்னார்.''

''யார் அவர்?''

''இன்னும் ஐந்து நிமிஷத்தில் அவரே இங்கு வருவார்'' சொன்ன விவேக் விஷ்ணுவைப் பார்க்க, அவன் தன் கையில் வைத்து இருந்த செல்போனை உசுப்பி பேசினான். ''நெப்போலியன்! அரங்கேற்றம் பண்ண வேண்டிய நேரம் வந்தாச்சு. அவரைக்

கூட்டிகிட்டு டி.ஜி.பி. செல்லுக்கு வந்துடு.''

விஷ்ணு செல்போனை அணைத்தான்.

விவேக் டி.ஜி.பி. சௌத்ரியை ஏறிட்டான்.

''ஸார்! ஒரு ஐந்து நிமிடம் காத்திருக்கலாமா?''

''தாராளமாய்!'' என்று சௌத்ரியின் உதடுகள் சொன்னாலும் முகம் ஒரு பாறையைப் போல் இறுகியிருந்தது. செல்லில் இருந்த அத்தனை உயரதிகாரிகளும் வேண்டாத மௌனம் காத்தார்கள்.

வரப் போகிற நபர் யார்?

சரியாய் ஐந்து நிமிடம்.

செல்லின் கதவைத் திறந்து கொண்டு யாரோ உள்ளே நுழையும் சத்தம் கேட்டு டி.ஜி.பி. சௌத்ரி திரும்பினார்.

சுனில் யாதவ்.

புயல்களுக்கு பெயர் வைக்கும் விஷயத்தில் இந்தியாவும் ஒரு பெயர்ப் பட்டியலைக் கொடுத்து இருக்கிறது. அந்தப் பட்டியலில் இருக்கும் பெயர்கள் அக்னி, ஆகாஷ், பிஜ்லீ, ஜல், லெஹர், மேஹ், சாஹர், வாயு. வங்கக்கடலில் புயல்கள் உருவாகும் போது இந்தப் பெயர்களிலிருந்து ஏதாவது ஒரு பெயரை எடுத்து அந்தப் புயலுக்கு வைப்பார்கள். எந்த புயல் மிகவும் கடுமையான சேதங்களை உருவாக்குகிறதோ அந்த புயலின் பெயரை மீண்டும் பயன்படுத்துவது இல்லையென்றும் அந்தப் பெயரை வேறு எதற்கும் சூட்டுவது இல்லையென்றும் சர்வதேச வானிலை மையம் ஒரு சம்பிரதாயத்தைக் கடைப் பிடித்து வருகிறது. அண்மையில் இந்தியாவை மிகவும் அச்சுறுத்திய புயலின் பெயர் **பைலின்**. இந்தப் பெயரைக் கொடுத்த நாடு தாய்லாந்து.

## 10

டி.என்.ஏ. ரிசர்ச் ஸ்காலர் சுனில் யாதவ்வைப் பார்த்ததும் தான் உட்கார்ந்திருந்த நாற்காலியை விட்டு தன்னிச்சையாய் எழுந்தார் சௌத்ரி.

ஐம்பது வயதான சுனில் யாதவ் தலை குனிந்தபடி உள்ளே வந்தார். அவர்க்குப் பின்னால் தமிழ்நாடு க்யூ ப்ராஞ்ச்சைச் சேர்ந்த நெப்போலியன் தொடர்ந்தார்.

அறைக்குள் நிலவிய அந்த அவஸ்தையான மௌனத்தை விவேக் கலைத்தான். "ஸார்! மிஸ்டர் சுனில் யாதவ் இந்த கான்ஃப்ரன்ஸ் செல்லுக்கு வருவார் என்று நீங்கள் உள்பட இங்கே இருக்கிற யாருமே எதிர்பார்த்து இருக்க மாட்டீர்கள். ஒரு விஷயம் உண்மையா பொய்யா என்று தெரிய வேண்டுமானால் அந்த விஷயத்தோடு சம்பந்தப்பட்ட நபரே நேரில் வந்தால்தானே அது சரியாய் இருக்கும்? முறையாய் இருக்கும்?"

சௌத்ரி சுனில் யாதவ்வை ஒரு கோபப் பார்வை பார்த்தார். வார்த்தைகள் வெடித்தது.

"வாட் ஈஸ் ராங்க் வித் யூ மிஸ்டர் சுனில்?"

"ஸாரி ஸார்! ஒரு தப்பு நடந்து விட்டது. அந்தத்தப்பை நான் செய்து இருக்கக்கூடாது. அதற்காக நான் உங்களிடம் மன்னிப்பு கேட்டுக் கொள்கிறேன்! சரண் அத்வாலேவின் உடம்புத்துண்டுகளோடு கலந்து இருந்த இன்னொரு உடம்புத்துண்டு ஒரு ஆணினுடையது என்று ரிப்போர்ட்டில் எழுதியிருந்தேன். அது தப்பு. அது ஒரு பெண்ணின் உடம்புத்துண்டு."

சௌத்ரியின் குரல் உயர்ந்தது.

"இப்படியொரு தப்பான ரிப்போர்ட் எழுத யார் காரணம்?"

"அது வந்து...ஸார்...!"

"ம்.. சொல்லுங்கள்!"

"சரண் அத்வாலேயின் மகன் மஹி அத்வாலே."

"எதற்காக அப்படி எழுதச் சொன்னார்?"

"எனக்குத் தெரியாது. அது ஒரு பெண்ணின் உடம்புத்துண்டு என்று எந்த ஒரு காலகட்டத்திலும் தெரியாத- முடியாத அளவுக்கு ரிப்போர்ட் இருக்க வேண்டும் என்று மஹி அத்வாலே கேட்டுக் கொண்டார். அதன் படியே ரிப்போர்ட் எழுதிக் கொடுத்தேன்."

"இப்படியொரு வேலையைச் செய்ய மஹி உங்களுக்கு பணம் கொடுத்தாரா?"

''ம்..கொடுத்தார்.''

''எவ்வளவு?''

''பத்து லட்சம்.''

''ஆர்...யூ அஷேம்ட் டு பி ஏ ரெப்யூட்டட் ரிசர்ச் ஸ்காலர்?''

''ஸாரி...!''

''வாட் ஸாரி...?'' கோபமாய் கத்தி எகிற முயன்ற சௌத்ரியை ஏறிட்டான் விவேக்.

''ஸார்! டோன்ட் பி எமோஷனல். 'பெண்' என்கிற ஒரு வார்த்தைக்கு பதிலாக 'ஆண்' என்ற வார்த்தையைப் போட்டால் பத்து லட்சம் ரூபாய் கிடைக்கிறது என்றால் யார்க்குத்தான் சபலம் தட்டாது...?''

இப்போது சௌத்ரியின் பார்வை விவேக்கின் மேல் நிலைத்தது.

''மிஸ்டர் விவேக்!''

''ஸார்?''

''சுனில் யாதவை எப்படி ட்ராப் செய்தீர்கள்?''

விவேக் சில விநாடிகள் மௌனமாய் இருந்துவிட்டு மெதுவாய் பேச்சை ஆரம்பித்தான்.

''ஸார்! சரண் அத்வாலே மர்டர் விஷயமாய் நான் சென்னையிலிருந்து மும்பை புறப்படுவதற்கு முன்னால் நான் சில நிழல்தனமான காரியங்களுக்கு ஏற்பாடு செய்துவிட்டுத்தான் ஃப்ளைட் ஏறினேன். அதில் ஒன்று மஹி அத்வாலேவின் வீட்டையும் அவரையும் இடைவிடாமல் 24 மணி நேரமும் கண்கணிப்பது! சென்னை க்யூ ப்ராஞ்சிலிருந்து மூன்று துடிப்பான அதிகாரிகளை தேர்வு செய்தேன். நெப்போலியன், பரசுராம், ரவிப்ரகாஷ். இந்த மூன்று பேரும் எனக்கு முன்பாகவே மும்பை வந்து தலா எட்டுமணி நேரம் ஷிஃப்ட் வைத்துக் கொண்டு மஹியையும் அவருடைய வீட்டையும் கண்களுக்கு லேசர் உன்னிப்பைக்கொடுத்து கண்காணிக்க ஆரம்பித்துவிட்டார்கள். நேற்று இரவு 11 மணிக்கு மேல் க்யூ ப்ராஞ்ச் ஆபீஸர் நெப்போலியன் கண்காணிப்பு பணியில் ஈடுபட்டு இருந்த போது மஹியின் பங்களாவுக்கு ஒரு கார் வந்தது. போர்டிகோவில் வந்து நின்றது. போர்டிகோவில் தயாராய் நின்றிருந்த மஹி தன் கையில் வைத்து

இருந்த ஒரு ப்ரீப் கேஸை கார்க்குள் இருந்த ஒரு நபரிடம் கொடுத்தார். ப்ரீப்கேஸ் வாங்கப்பட்டதுமே கார் உடனடியாய் வீட்டை விட்டு வெளியே வந்தது. அந்தக் காரைப் பின்தொடர்ந்து நெப்போலியன் சென்றார். வழியில் மடக்கினார். காரில் இருந்த சுனில் யாதவ் மாட்டினார். அவரை விசாரிக்கிற விதத்தில் விசாரித்த போது DNA ரிப்போர்ட் விஷயமும், பத்து லட்ச ரூபாய் விஷயமும் வெளியே வந்தது. இப்போது நமக்குக் கிடைத்து இருக்கிற விஷயங்கள் பத்து சதவீதம் மட்டுமே. மேற்கொண்டு நமக்கு உண்மைகள் தெரிய வேண்டுமென்றால் சுனில் யாதவ்வையும் மஹியையும் ஒரு முறையான போலீஸ் விசாரணைக்கு உட்படுத்த வேண்டும்.''

டி.ஜி.பி. சௌத்ரி மெதுவாய் நடந்து சென்று சுனில்யாதவ் தோள் மீது கையை வைத்தார்.

''மிஸ்டர் சுனில்! அரசாங்கத்துக்கு உண்மையான முறையில் உழைக்க இஷ்டமில்லாத பட்சத்தில் ராஜினாமா செய்து விட்டு போயிருக்கலாமே? எதற்காக இந்த பச்சைத் துரோகம்...?''

''ஸாரி ஸார்...''

''இப்படி நடந்து கொண்டதற்காக உண்மையிலேயே நீங்கள் வருத்தப்படுகிறீர்களா சுனில்?''

''ஆமாம்...''

''அப்படியானால் இப்போது நான் கேட்கும் கேள்விகளுக்கு நீங்கள் உண்மையான பதில்களைச் சொல்வீர்களா?''

''சொல்கிறேன்.....''

''சரண் அத்வாலே கொலை செய்யப்பட்டதற்கு யார் காரணம்?''

''அது எனக்குத் தெரியாது! டி.என்.ஏ. ரிப்போர்ட்டில் 'பெண்' என்பதற்கு பதிலாய் 'ஆண்' என்று எழுதியது நான். அப்படி எழுத வைத்தது சரண் அத்வாலேவின் மகன் மஹி அத்வாலே. இந்த இரண்டு உண்மைகள் தவிர வேறு எந்த உண்மையும் எனக்குத் தெரியாது.''

''சரண் அத்வாலேவின் உடம்புத்துண்டுகளில் ஒரு பெண்ணின் உடம்புத்துண்டும் கலந்து இருந்தது உண்மைதானே?''

''உண்மைதான்.''

''யார் அந்தப் பெண்?''

''எனக்குத் தெரியாது.''

''மஹி உங்களிடம் சொல்லவில்லையா?''

''சொல்லவில்லை.''

''சரி! தன்யா என்ற பெண்ணை உங்களுக்குத் தெரியுமா?''

''தெரியாது.''

விவேக் இப்போது முன்னால் வந்தான். தன் கையில் வைத்து இருந்த இரண்டு போட்டோக்களில் ஒன்றை சுனில் யாதவ்விடம் காட்டினான்.

''இவள்தான் தன்யா.''

சுனில் யாதவ் பார்த்துவிட்டு ''இதுவரைக்கும் இந்தப் பெண்ணை நான் பார்த்தது இல்லை'' என்றார்.

இன்னொரு போட்டோவைக் காட்டினான்.

''இந்த போட்டோவில் இருப்பவன் யார் என்று தெரிகிறதா?''

சுனில் யாதவ் எந்திரத்தனமாய் தலையாட்டினார்.

''தெரியாது.''

''இவன் பெயர் பிஸ்வாஸ். என்னை ஒரு வேனில் கடத்திய மூன்று பேர்களில் ஒருவன்.''

''நீங்கள் சொல்லும் பெயர்களையெல்லாம் இப்போதுதான் கேள்விப்படுகிறேன். இந்த விஷயத்தில் எனக்கு மஹியைத் தவிர வேறு யாரையும் தெரியாது.''

''இது ஒன்றும் பொய்யில்லையே?''

''இனி பொய் சொல்ல முடியாது என்பது எனக்குத் தெரியும்''

விவேக், டி.ஜி.பி. சௌத்ரியிடம் திரும்பினான்.

''ஸார்...! சுனில் யாதவ் வெறும் அம்புதான். நாம் விசாரிக்க வேண்டியது 'மஹி அத்வாலே' என்கிற வில்லைத்தான்!''

''மஹி அத்வாலேவை அவருடைய வீட்டில் வைத்து விசாரித்தால் உண்மை வெளியே வராது. நம்முடைய இடத்துக்கு கொண்டு வந்துவிட

வேண்டும்.''

விவேக் நெப்போலியனிடம் திரும்பினான்.

''மஹி அத்வாலேவை இப்போ கண்காணிச்சுட்டு இருக்காங்க...?''

''ரவி ப்ரகாஷ் ஸார்...! நான் வேணும்ன்னு ரவிப்ரகாஷ்க்கு போன் பண்ணி மஹி எங்கே இருக்கார்ன்னு கேட்டுச் சொல்றேன்.'' சொன்ன நெப்போலியன் தன் செல்போனில் தொடர்பு கொண்டு பேசிவிட்டு விவேக்கை ஏறிட்டான்.

''ஸார்! மஹி இப்போ ஒர்லியில் இருக்கிற அவருடைய கெஸ்ட் ஹவுஸில் இருப்பதா தகவல்.''

''அங்கேயே போய்விட வேண்டியதுதான்!''

கடல்களில் புயல் சின்னம் உருவானால்தான் நமக்கு மழை கிடைக்கும். புயல் சின்னம் உருவாகாவிட்டால் மழை பெய்வது என்பது ஒரு பகல் கனவாக மாறிவிடும். நம் நாட்டுக்குத் தேவையான குடிநீர்க்கும், விவசாயத்துக்குத் தேவையான தண்ணீர்க்கும் தென்மேற்கு பருவமழையும், வடகிழக்கு பருவ மழையும் கை கொடுக்காத போது நமக்கு ஆபத்பாந்தவன்களாய் இருப்பது புயல் சின்னங்கள்தான். முன்பெல்லாம் கடலில் ஒரு புயல் என்றால் பயம் வரும். இப்பொழுது புயல் என்றால் மனசுக்குள் ஒரு சந்தோஷம் வருகிறது. புயல் வந்தால் மழை வரும். மழை வந்தால் தண்ணீர் பஞ்சம் தீரும் என்ற நம்பிக்கையில் மனம் மகிழ்ச்சி கொள்கிறது. இன்றைக்கு சாட்லைட்களின் உதவியோடு கடலில் உருவாகும் புயல் பலசாலியா இல்லை நோஞ்சானா என்பதை வானிலை அதிகாரிகள் கண்டுப்பிடித்து விடுகிறார்கள். புயல் வலுவாக இருந்தால் அதை சமாளிக்கத் தேவையான் முன்னேற்பாடுகளையும் செய்து விடுவதால் புயல் இப்போது ஒரு நாய்க்குட்டி போல் நமக்கு பழகிவிட்டது.




மும்பையின் ஒர்லி ஏரியாவின் ...க்கள் நடமாட்டம் அதிகம் ...ல்லாத பகுதியில் ...ஹி அத்வாலேவின் கெஸ்ட் ...றவுஸ் மூன்று ஏக்கர் பரப்பில் ...ரங்களுக்கு மத்தியில் ...ஸ்தாரமாய் தெரிந்தது.

பிரதான காம்பௌண்ட் கேட் அருகே ஒரு ...சக்யூர்ட்டி போஸ்ட் தெரிய- கார் நின்றது. நீல நிற ...னிஃபார்ம் அணிந்த இரண்டு அதிகாரிகள் ஓடி ...ந்து கார்க்குள் எட்டிப்பார்த்து உள்ளே டி.ஜி.பி ...சௌத்ரி, விவேக், விஷ்ணு இருப்பதைப் பார்த்து ...ிட்டு பதட்டத்தோடு பாதையை மறித்த ...ரும்பாலான போஸ்ட்டை தூக்கினார்கள்.

கார் உள்ளே போயிற்று.

நிறைய மரங்கள். ஏதோ காட்டுப்பகுதிக்குள் வந்து விட்டது போன்ற ஒரு உணர்வு. விஷ்ணு விவேக்கின் காதருகே ''பாஸ்'' என்று முணுமுணுத்தான்.

''என்ன?''

''மஹி அத்வாலேவுக்கு இந்த ஒரு சொத்து போதும். அவரோட ஏழு தலைமுறைக்கும் சொர்க்க வாழ்க்கைதான்...! பெரிய அரண்மனை மாதிரி பங்களா. பாஸ்! இதெல்லாம் வியர்வை சிந்தி சம்பாதிச்ச சொத்தாய் இருக்கும்ன்னு நினைக்கறீங்களா?''

''நாம போலீஸ்! இன்கம்-டாக்ஸ் டிபார்ட்மெண்ட் கிடையாது. பேசாமே வாடா...!''

பளபளப்பான க்ரானைட் போர்டிகோவில் கார் போய் நின்றது. மூன்று பேரும் இறங்க, கருநீலநிற சூட் அணிந்த நபர் ஒருவர் எதிர்கொண்டு 'விஷ்' செய்தார்.

''வெல்கம் ஸார்! நீங்கள் உள்ளே வந்து கொண்டிருப்பதாக செக்யூர்ட்டி போஸ்டிலிருந்து தகவல் கொடுத்தார்கள். வாட் கேன் ஐ டூ ஃபார் யூ ஸார்?''

''மஹி அத்வாலேயைப் பார்த்துப் பேச வேண்டும்!''- விவேக் சொல்ல அவர் முகம்

மாறினார்.

''விஷயம் என்னவென்று...?'

''நீங்கள் அவருடைய பர்சன
அஸிஸ்டண்ட்தானே?''

''ஆமாம் ஸார்.''

''அந்த வேலையை மட்டும் நீங்கள் பார்த்தா
போதும். மஹி இப்போது எங்கே?''

''மாடியில் ஓய்வு எடுத்துக் கொண்டிருக்கிறார்

''நாங்கள் வந்து இருப்பதாக தகவ
கொடுங்கள்!''

''ஸாரி ஸார்.''

''எதற்காக இந்த ஸாரி?''

''அவர் ஓய்வு எடுக்கும் போது யாரும் அவரை
பார்க்க அனுமதியில்லை. நீங்கள் அவரைப் பார்க்
வேண்டுமென்றால் ஒரு மணி நேரம் காத்திருக்
வேண்டும்.''

''ஓ.கே... நாங்கள் ஒரு மணி நேரம் காத்து
இருக்கிறோம். அதற்கு முன்பாக நாங்கள்
உங்களைக் கைது பண்ண வேண்டியிருக்கும்.
பரவாயில்லையா?''

அவர் கண்களில் மிரட்சி தெரிந்தது.

''எதற்காக கைது?''

''அரசு ஊழியர்கள் தங்கள் கடமையை செய்ய
முயலும் போது அவர்களை யார் தடுக்கிறார்களோ
அவர்களை உடனடியாய் கைது செய்யலாம் என்று
சட்டம் சொல்கிறது.''

''யூ ஆர் கரெக்ட் ஸார்...பட்...''

''என்ன... சொல்லுங்கள்...''

''நான் உங்களை மேலே போக அனுமதித்தால்
நான் இங்கே மேற்கொண்டு வேலை பார்க்க
முடியாது!''

''அதற்காக நாங்கள் எங்களுடைய கடமையைச்
செய்யாமல் இருக்கமுடியாது. உங்களுக்கு ஒரு
நிமிஷம் அவகாசம். நீங்கள் மஹிக்கு தகவல்
கொடுத்து அவரைக் கீழே வரவழைக்கவேண்டும்.
இல்லாவிட்டால் நாங்கள் மேலே போவோம்.''

''நீங்கள் மேலே போக வேண்டாம். நான்
அவரிடம் பேசுகிறேன்''- சொன்ன பி.ஏ. தன்
செல்போனில் மேலே இருந்த மஹியோடு தொடர்பு

கொண்டார்.

"ஸார்! போலீஸ் டிபார்ட்மெண்ட்டிலிருந்து உங்களைப் பார்த்து பேசுவதற்காக இரண்டு அதிகாரிகளுடன் டி.ஜி.பி வந்து இருக்கிறார். நீங்கள் கீழே வருகிறீர்களா..... அல்லது அவர்களை நான் மேலே அனுப்பட்டுமா?"

"என்ன விஷயம் என்று கேட்டாயா?"

"கேட்டேன் ஸார்.... உங்களிடம்தான் பேச வேண்டும் என்று சொன்னார்கள்."

"சரி...மேலே அனுப்பு."

பி.ஏ. செல்போனை அணைத்தார். "ஸார்...! நீங்கள் மேலே போய் அவரைப் பார்க்கலாம். முதல் மாடி. இரண்டாவது அறை."

மூன்று பேரும் மாடிப்படிகளில் ஏறினார்கள். டி.ஜி.பி மெள்ள "மிஸ்டர் விவேக்!" என்றார்.

"ஸார்...!"

"நீங்கள் மஹியை விசாரியுங்கள். நானும் மிஸ்டர் விஷ்ணுவும் மஹியை அப்ஸர்வ் செய்கிறோம்."

"எஸ்...ஸார்."

"கேள்விகள் சின்னச் சின்னதாய் இருக்கட்டும். அப்போதுதான் மஹி பேசும் பொய்களின் எண்ணிக்கை நமக்கு தெரியவரும்."

மூன்று பேரும் மாடியின் வராந்தாவுக்கு வந்து இரண்டாவது அறைக்கு முன்பாய் நின்று வெறுமனே சாத்தியிருந்த கதவைத் தள்ளினார்கள்.

கதவு உள் வாங்கியது.

அறைக்குள் நுழைந்தார்கள். பெரிய அறை. ஏ.சி. சத்தமில்லாமல் இயங்கிக் கொண்டிருக்க மொத்த அறையும் ஒரு குளிர்பிரதேசமாய் மாறியிருந்தது.

அறையில் யாரும் இல்லை.

'மஹி எங்கே?' என்கிற குழப்பத்தோடு டி.ஜி.பி சௌத்ரி, விவேக், விஷ்ணு மூன்று பேரும் தங்களுடைய விழிகளைச் சுழற்றினார்கள். விவேக்கின் பார்வை கட்டிலுக்கு கீழே போயிற்று. பார்வை அதிர்ச்சியில் அதிர்ந்தது.

"ஸார்! அங்கே பாருங்கள்."

சௌத்ரி பார்த்தார்.





மஹி கட்டிலுக்கு கீழே சுவரோரமாய் மல்லாந்து விழுந்திருந்தான். கடைவாயில் வழிந்திருந்த ரத்தம் மார்புச் சட்டையையும் நனைத்து இருந்தது.

'பூமியில் கடல்கள் எப்படி தோன்றியிருக்க வேண்டும்?' என்கிற கேள்விக்கு பலவிதமான விடைகள் வானிலை நிபுணர்களால் பல்வேறு காலகட்டங்களில் சொல்லப்பட்டன. 'கோடிக் கணக்கான ஆண்டுகளுக்கு முன்பு சூரியனிலிருந்து பிரிந்து வந்த ஒரு நெருப்புக்கோளம்தான் பூமி என்று சொல்வது உண்மையானால் அந்த நெருப்புப் பந்தில் 75 சதவீதப் பகுதி கடலாக மாறியது எப்படி?' இந்தக்கேள்விக்கு வான அறிவியலார் சொல்லும் பதில் இது: "ஆரம்பத்தில் நெருப்புக் கோளமாய் இருந்த பூமியில் இருந்து புகையும், தூசியும் மேல் நோக்கி சென்று வானத்தில் மேகங்களாக மாறி திரண்டு நின்று குளிர்ந்தன. மேகங்களில் இருந்த ஆக்ஸிஜன் கூறுகளும், ஹைட்ரஜன் கூறுகளும் இணைந்து நீர்த்திவலைகளாக மாறி பொழிந்தது. பூமியில் பெய்த முதல் மழை இதுதான்."

## 12

ஹாஸ்பிடலின் ஐ.ஸி.யூனிட்டிலிருந்து வெளிப்பட்ட டாக்டர் புருஷோத்தமை விவேக்கும், டி.ஜி.பி.யும் எதிர் கொண்டார்கள்.

"டாக்டர்! ஹௌ ஈஸ் மஹி?"

"நோ ப்ராப்ளம்... உயர் ரத்த அழுத்தத்தின் காரணமாய் மூளையில் உள்ள ஒரு சிறிய ரத்தத் தந்துகி வெடித்து மயக்கமாகியிருக்கிறார். கடைவாயிலும் மூக்கிலும் வழிந்த ரத்தம் மார்புச்சட்டையை நனைத்து இருக்கிறது. அவ்வளவுதான். மஹி சரியான நேரத்திற்கு ஹாஸ்பிடலுக்கு கொண்டு வரப்பட்டதால் ஸ்ட்ரோக் ஏற்படும் அபாயத்தில் இருந்து காப்பாற்றப்பட்டு விட்டார். இனி ஒரு நாள் அவர் ஓய்வு எடுத்துக்

கொண்டால் போதும், பழைய ஆரோக்கியமான நிலைமைக்குத் திரும்பிடுவார்.''

''இப்படியொரு உடல்நலக்குறைவு மஹிக்கு வர என்ன காரணம்?''

''திடீரென்று ஏற்பட்ட ஹைபர்டென்ஷன்தான்.... உயர்ரத்த அழுத்தம் இருப்பவர்கள் ஏதாவது ஒரு அதிர்ச்சியான செய்தியைக் கேட்கும் போது இது மாதிரியான மயக்க நிலைமைக்குப் போவது இயற்கைதான்.''

''நாங்கள் மஹியைப் போய்ப் பார்க்கலாமா?''

''தாராளமாய்...! ஆனால் பத்து நிமிடங்களுக்கு மேல் பேசிக் கொண்டு இருக்க வேண்டாம்.''

''ஓ.கே!.... தேங்க்யூ டாக்டர்''

டாக்டர்க்கு நன்றி சொல்லிவிட்டு மூன்று பேரும் ஐ.ஸி.யூனிட்டை நோக்கி நடந்தார்கள். விஷ்ணு சொன்னான்: ''பாஸ்! மஹிகிட்ட நிச்சயமாய் ஒரு தப்பு இருக்கு. இல்லேன்னா நாம மூணுபேரும் அவரை பார்க்கிறதுக்காக வந்திருக்கோம்ன்னு அவரோட பி.ஏ. சொன்னதுமே பி.பி எகிற வேண்டிய அவசியம் இல்லையே.....?''

''இப்போ பேசிப் பார்த்தா உண்மை என்னான்னு தெரிஞ்சுடும்.''

இரண்டு நிமிஷ நடையில் ஐ.ஸி. யூனிட் வந்தது. மூன்று பேரும் உள்ளே நுழைந்தார்கள். மஹி கட்டிலுக்கு சாய்ந்து உட்கார்ந்து கண்ணாடி டம்ளரில் இருந்த ஆரஞ்சு ஜூஸை ஸ்ட்ராவின் உதவியால் மெள்ள உறிஞ்சிக் கொண்டிருந்தான். அவர்களைப் பார்த்ததும் லேசாய் முகம் இருண்டான். விவேக் மஹிக்குப் பக்கத்தில் போய் நின்று தன்னுடைய உதடுகளை புன்னகையில் விரித்தான். ஆங்கிலம் பேசினான்.

''எப்படி இருக்கிறீர்கள் மஹி?''

''நவ் அயாம் ஆல்ரைட்....! சரியான நேரத்தில் என்னை ஹாஸ்பிடலுக்கு கொண்டுவந்து சேர்த்த உங்களுக்கு என் நன்றி!''

''நீங்கள் எங்களுக்கு உண்மையிலேயே நன்றி சொல்ல விரும்பினால் நாங்கள் கேட்கப் போகும் கேள்விகளுக்கு உண்மையான பதில்களைச் சொல்ல வேண்டும்.''

''கே...கே...கேளுங்கள்!''

''உங்களுடைய அப்பாவின் டி.என். ரிப்போர்ட்டை மாற்றி எழுதுவதற்காக டி.என். ரிசர்ச் ஸ்காலர் சுனில் யாதவ்க்கு பத்து லட்ச ரூபா கொடுத்தது உண்மையா?''

''அது வந்து....வந்து...''

''எந்தவிதமான மழுப்பலும் வேண்டா உண்மையா பொய்யா?''

''உண்மை.''

''எதற்காக அப்படி மாற்றி எழுத சொன்னீர்கள்?''

சில விநாடிகள் வரை மௌனமாய் இருந்த மது பிறகு கண்களில் நீரோடு நிமிர்ந்தான். குரல் கம் சொன்னான்.

''என்னுடைய அப்பா சரண் அத்வாலேவை பற்றிய ஒரு கசப்பான உண்மை வெளியுலகுக்கு தெரியக்கூடாது என்று நினைத்தேன்!''

''கசப்பான உண்மையா?''

''ஆமாம்...! என்னுடைய அம்மா இறந்த போது அப்பாவுக்கு நாற்பத்தியோரு வயது. வேறொரு பெண்ணைப் பார்த்து இரண்டாவது கல்யாணம் செய்து கொள்ளும்படி உறவினர்களும், நண்பர்களும் சொன்ன போது அப்பா அதற்கு சம்மதிக்கவில்லை.... தன்னுடைய கவனத்தை முழுவதுமாய் பிசினஸில் செலுத்தினார். என்னை ஒரு நல்ல ஹாஸ்டலில் சேர்த்து படிக்க வைத்துக் கொண்டே வெளிநாடுகளுக்குப் பறந்தார். அவர் இடைவிடாமல் உழைத்த உழைப்பிற்கு பலனாக இந்தியாவின் முதல் 100 பணக்காரர்களில் ஒருவராய் உருவானார். அப்பா ஒரு பக்கம் இப்படி விஸ்வரூபம் எடுத்தது எனக்கு சந்தோஷத்தைக் கொடுத்தாலும் இன்னொரு பக்கம் அவருடைய செயல்பாடு எனக்கு அதிர்ச்சியாய் இருந்தது.''

''அதிர்ச்சியான செயல்பாடா?''

''ஆமாம் ஸார்...! அப்பாவுக்கு கடந்த இரண்டு மூன்று வருஷமாக மதுலிகா என்ற ஒரு டி.வி. காம்பியரிங் பெண்ணோடு தொடர்பு இருக்கிறது. இரண்டு பேரையும் ஃபைவ் ஸ்டார் ஹோட்டல் ஒன்றில் ஒரு தடவை நான் பார்த்துவிட்டேன்.

அப்பாவிடமும் அது பற்றி கேட்டேன். அதற்கு அப்பா சொன்ன பதில் எனக்கு அதிர்ச்சியாய் இருந்தது.''

''அப்படி அவர் என்ன சொன்னார்?''

''அந்த மதுலிகாவை கூடிய சீக்கிரம் கல்யாணம் செய்துகொள்ளப்போவதாக சொன்னார். மதுலிகாவைப்பற்றி நான் வெளியே விசாரித்தபோது அந்தப் பெண் டி.வி. காம்பியரிங் செய்துகொண்டே சில நிழல் காரியங்களை செய்வதாகக் கேள்விப்பட்டேன். அது பற்றி நான் என் அப்பாவிடம் பேசிய போது என் மீது அவர் கோபப்பட்டார். மதுலிகா நல்ல பெண் என்றும் இன்னும் இரண்டு மாதம் கழித்து அவளைக் கல்யாணம் செய்துகொள்ளப்போவதாகவும் சொன்னார். அவர் அப்படி பேசிய நாளிலிருந்து நான் அவரிடம் சுமுகமாய் பேசுவதைக் குறைத்துக் கொண்டேன். இந்த நிலைமையில்தான் அவர் இரண்டு வாரங்களுக்கு முன்பு படுகொலை செய்யப்பட்டார். உள்துறை அமைச்சர் ஜெயபால் சர்மா இந்த விஷயத்தை மீடியாக்களுக்கு தெரியப்படுத்தாமல் மும்பை போலீஸ் மூலம் புலன்விசாரணை நடத்திக் கொண்டிருந்தார். இந்தியாவில் உள்ள மிகப் பெரிய பணக்காரர்கள் கொலை செய்யப் படும்போது அதன் பின்னணியில் தீவிரவாத இயக்கம் ஏதாவது செயல்பட்டு இருக்கிறதா என்பதைப்பார்ப்பதற்காக செய்யப்படும் ஏற்பாடு இது என்று அவர் சொன்ன போது நானும் அதை ஏற்றுக் கொண்டேன்.''

விவேக் குறுக்கிட்டு கேட்டான்.

''உங்களுடைய அப்பாவுக்கும் அந்த மதுலிகாவுக்கும் இருக்கிற தொடர்பைப் பற்றி உள்துறை அமைச்சரிடம் சொன்னீர்களா?''

''சொல்லவில்லை.''

''ஏன்?''

''சொல்லப் பிடிக்கவில்லை. ஒழுக்கம் கெட்ட மதுலிகாவுக்கும் என்னுடைய அப்பாவுக்கும் தொடர்பு இருக்கிறது என்கிற விஷயத்தையும், அவளைத்தான் அவர் கல்யாணம் செய்து கொள்ளப் போகிறார் என்கிற தகவலையும் வெளியே சொல்ல எனக்கு வெட்கமாய் இருந்தது.''

''சரி! உங்களுடைய அப்பாவுக்கும்

மதுலிகாவுக்கும் இருந்த தொடர்பு இன்றைய ஊடகங்களுக்கு எப்படி தெரியாமல் போயிற்று?''

''பொதுவாகவே அப்பாவுக்கு தன் மேல் விளம்பர வெளிச்சம் விழுவதை விரும்பமாட்டார். அதே போல் மதுலிகாவுடனான தொடர்பையும் அவர் ரகசியமாகவே வைத்திருந்தார்.''

''உங்களுடைய அப்பாவின் உடல்துண்டுகளோடு ஒரு பெண்ணின் உடல்துண்டும் இருந்தது என்கிற உண்மையை மறைக்கத்தான் டி.என்.ஏ. ரிசர்ச் ஸ்காலர் சுனில் யாதவுக்கு பத்து லட்ச ரூபாய் பணம் கொடுத்தீர்களா?''

''ஆமாம்...!''

''அதாவது அந்தப் பெண்ணின் உடல்துண்டு மதுலிகாவோடதாக இருக்கலாம் என்கிற சந்தேகம் உங்களுக்கு?''

''ஆமாம்...!''

''எதனால் உங்களுக்கு அந்த சந்தேகம்?''

''அப்பா கொலை செய்யப்பட்டது எனக்குத் தெரிய வந்ததுமே அதற்குக் காரணம் மதுலிகாவாக இருக்குமோ என்கிற சந்தேகத்தில் அவளுடைய நடவடிக்கைகளைக் கவனிக்க முயற்சி செய்தேன். ஆனால் அவள் என் பார்வையிலேயே படவில்லை. அவளுடைய வீடு பூட்டியிருந்தது. 'காம்பியரிங்' செய்வதற்காக அவள் டி.வி. ஸ்டேஷனுக்கும் போகவில்லை''

''அவள் எந்த டி.வி.யில் 'காம்பியரிங்' செய்கிறாள்?''

''மன்பசந்த் என்கிற டி.வி. சர்ச்கேட் ரயில்வே ஸ்டேஷனுக்குப் பக்கத்தில் அந்த டி.வி. ஸ்டேஷன் இருக்கிறது.''

''மிஸ்டர் மஹி! நீங்கள் படித்தவர். உங்களுடைய அப்பா கொடூரமான முறையில் கொலை செய்யப்பட்டிருக்கிறார். அவர் ஏன் அப்படி கொலை செய்யப்பட்டார், எதற்காக கொலை செய்யப்பட்டார் என்பதைத் தெரிந்து கொள்வதற்காக நம்மை போலீஸும் நாங்களும் படாதபாடு பட்டுக் கொண்டிருக்கும் போது நீங்கள் மதுலிகா விவகாரத்தை இப்படி மூடி வைத்தது எந்த விதத்தில்

சரி?''

''ஸாரி ஸார்... அப்பா பேர்ல நிறைய பேர்க்கு மதிப்பும் மரியாதையும் இருக்கிறது. அந்த மதிப்பில் ஒரு கரும்புள்ளி விழுந்துவிடக்கூடாது என்கிற எண்ணத்தில் தான் அப்படி நடந்து கொண்டேன்!''

''சரி! அந்த மதுலிகாவின் வீடு எங்கே இருக்கிறது?''

''சயான் ஏரியாவில் வல்லப் நகர், தேர்ட் க்ராஸ் 25-ம் எண் வீடு....!''

அந்த அட்ரஸை விவேக் மனசுக்குள் குறித்துக் கொண்டு மஹியிடம் கேட்டான். ''உங்களுக்கு தன்யா என்கிற பெண்ணைத் தெரியுமா?''

''தன்யா?''

''ஆமாம்...''

''தெரியாது!''

''இந்த போட்டோவைப் பாருங்கள்.''

போட்டோவைப் பார்த்துவிட்டு தலையாட்டினான் மஹி. ''இந்தப் பெண்ணை நான் பார்த்தது இல்லை.....''

''இவன் யார் என்று தெரிகிறதா?'' விவேக் கையில் வைத்து இருந்த மற்றொரு போட்டோவைக் காட்டினான்.

மஹி போட்டோவைப் பார்க்க, விவேக் சொன்னான். ''இவன் பெயர் பிஸ்வாஸ். என்னைக் கடத்த முயன்றவன்.''

''இவனையும் எனக்குத் தெரியாது.''

''மஹி! நீங்கள் இந்த இரண்டு பேரையும் தெரியாது என்று சொல்கிறீர்கள். ஆனால் இவர்கள் ஏதோ ஒரு வகையில் உங்களுடைய அப்பாவோடு சம்பந்தப்பட்டு இருக்கிறார்கள்.''

''எப்படி?''

''இனிமேல்தான் கண்டு பிடிக்கவேண்டும்!'' சொன்ன விவேக் விஷ்ணுவிடம் திரும்பினான்.

''விஷ்ணு! அந்த எண்களை எழுதிக் காட்டு.''

விஷ்ணு தன் சட்டைப்பையில் வைத்து இருந்த ஒரு தாளை எடுத்து அந்த எண்களை எழுதிக் காட்டினான்.

311-22-013

மஹி அந்த எண்களைப் பார்த்துவிட்(

நெற்றியைத் தேய்த்தான்.

''இது என்ன எண்கள்?''

''உங்களுக்குத் தெரியாதா?''

''தெரியாது.''

''நிஜமாகவே தெரியாதா?''

''தெரியாது! இனியும் நான் பொய் பேசிக் கொண்டிருந்தால் அது எனக்குத்தான் சிக்கல் என்று புரிந்து கொண்டுவிட்டேன். எனக்கு இந்த தன்யா, இந்த பிஸ்வாஸ், இந்த எண்கள் பற்றி எதுவுமே தெரியாது!'' மஹி தீர்மானமான குரலில் சொல்ல விவேக்கும் டி.ஜி.பியும் ஒருவரை யொருவர் குழப்பமான முகங்களோடு பார்த்துக் கொண்டார்கள்.

'மஹி சொல்வது எந்த அளவுக்கு உண்மை?'

பூமியில் பெய்த முதல் மழையின் அனைத்து நீர்த்துளிகளும் பூமியின் மேற்பரப்பில் பட்ட அடுத்தவிநாடியே ஆவியாய் மறைந்து போயிற்று. காரணம், பூமி சூடான ஒரு தோசைக்கல்லைப் போல் இரவும் பகலும் இருந்ததுதான். இந்த சூடு ஆற ஆயிரக் கணக்கான ஆண்டுகள மழை பெய்ய வேண்டியிருந்தது. பூமி குளிர்வதற்கு இன்னொரு காரணம் பூமியின் சுழற்சியில் 12 மணி நேரம் இரவாக இருந்தது. இடைவிடாமல் பெய்த மழையும், ஒரு நாளின் பனிரெண்டு மணி நேர இரவும் பூமியை குளிர்விக்க அதன் சூடு அடங்கிப் போயிற்று. அதன் பிறகு பெய்த மழை நீர் முழுவதும் பூமியின் பள்ளத் தாக்குகளில் தேங்க ஆரம்பித்து கடல்களாக மாறின. அந்தக் கடல்நீர் சூரிய வெப்பத்தால் ஆவியாகி மறுபடியும் மேகங்களாக மாறி மழை பெய்ய கடல்களின் பரப்பு அதிகமாயிற்று.

## 13

மும்பையின் சயான் ஏரியா. பல்லப் நகர். தேர்ட் க்ராஸ், 25-ம் எண் வீடு. வீட்டுக்கு வெளியே மும்பை போலீஸ் ஜீப் நின்றிருந்தது.

விவேக்கும், விஷ்ணுவும்

மேக்-பூட்டை உடைத்துக் கொண்டு வீட்டுக்குள் நுழைந்திருந்தார்கள்.

வீட்டின் பெரிய ஹாலின் மையத்தில் கறுப்பு நிற இம்போர்ட்டட் லெதர் சோபாக்கள் அரை வட்டமாய் போடப்பட்டு இருந்தது. நடுவே ஒரு கண்ணாடி டீபாய். சுவரில் மாட்டியிருந்த பெரிய போர்ட்ராய்டில் மதுலிகா நேர் பார்வையோடு காமிராவை பார்த்து சிரித்திருந்தாள். அழகாய் இருந்தாள். நேரில் பார்க்க இன்னமும் அழகாய் இருப்பாள் போல் தோன்றியது.

''பாஸ்...!''

''ம்?''

''மஹியோட அப்பா சரண் அத்வாலே இந்த மதுலிகாகிட்டே ஏன் சரண் அடைஞ்சார்ன்னு இப்பத்தான் புரியுது! அந்த ரெண்டு கண்ணையும் பாருங்க பாஸ். கூடங்குளம் அணு மின்நிலையத்தை மூடிட்டு மின்சாரம் 1000 மெகாவாட்ஸ் தயாரிக்கலாம் போலிருக்கு......''

''விஷ்ணு! வந்த வேலையைப் பாரு... இந்த மதுலிகா வீட்ல நமக்கு உபயோகப்படற மாதிரி ஏதாவது ஒரு சின்ன துரும்பாவது கிடைச்சாத்தான் மேற்கொண்டு இந்த கேஸ்ல ஒரு மில்லி மீட்டர் தூரமாவது நடக்க முடியும்.''

''இந்த வீட்டையே புரட்டிப் பார்த்துடலாம் பாஸ்.''

''ஒரு துண்டுசீட்டைக்கூட விடாதே! வீடு ஒரு டைப்பாய்தான் இருக்கு.''

''பாஸ்! வீடு ரெண்டு வாரமாய் பூட்டிக் கிடந்திருக்கு... இது எதிர் வீட்டுக்காரர் கொடுத்த தகவல். மதுலிகா டி.வி ஸ்டேஷனுக்கும் போகலை. இந்த வீட்டுக்கும் வரலை. ஸோ... சரண் அத்வாலே கொலை செய்யப்பட்டபோது அவளையும் போனஸாய் போட்டுத் தள்ளியிருக்கணும்.''

இருவரும் படுக்கையறைக்குள் நுழைந்தார்கள்.

வெல்வெட் தலையணைகளோடு, மர வேலைப்பாடுகளோடு கூடிய பெரிய கட்டில்.

''ஆஹா.....! ஓடிப் பிடி விளையாடலாம் போலிருக்கே?''

விவேக்கின் பார்வை அறையின் மூலையில் இருந்த மேஜைக்குப்போயிற்று. மேஜையின் மேல்

வாய் திறந்த நிலையில் ஒரு லேப்-டாப். அதன் மேல லேசாய் தூசி கோட்டிங். ஆன் செய்தான். அடுத்த ஒரு நிமிட நேரத்திற்குள் உயிர் பிடித்து 'கூகுள் க்ரோம்' வெப்சைட்டைக் காட்டியது.

விஷ்ணு ஆச்சர்யப்பட்டான்.

''என்ன பாஸ்! பாஸ்வேர்ட் எதுவும் கொடுக்காமலே லேப்-டாப் ஓப்பன் ஆயிடுச்சு...?''

''லேப்-டாப்பை பார்த்துட்டிருந்த மதுலிகாவோ இல்லேன்னா வேற யாரோ ஷட்-டவுன் பண்ணாமே போயிருக்காங்கன்னு நினைக்கிறேன்.''

''அதாவது... அவங்க லேப்-டாப்பை பார்த்துட்டிருக்கும் போது ஏதாவது ஒரு செல்போன் அழைப்பு வரவும் அவசரத்துல ஷட்-டவுன் பண்ணாமே போயிருக்கணும்.''

''மே...பி'' என்று சொன்ன விவேக் ஒரு ஆப்ஷனை 'க்ளிக்' செய்து பார்த்துவிட்டு ''விஷ்ணு! வீ ஆர் லக்கி'' என்றான்.

''எப்படி பாஸ்?''

''ப்ரவுஸிங் ஹிஸ்டரி உசிரோடு இருக்கு.....! இந்த ஹிஸ்டரியை சர்ச் பண்ணினால் போதும் மதுலிகா எந்தெந்த சைட்டுக்குள்ளே போயிட்டு வந்திருக்கான்னு தெரிஞ்சுடும்... நான் இதைப் பார்த்துட்டிருக்கேன். அதுக்குள்ளே நீ இந்த வீட்டை ஒரு அங்குலம் விடாமே உன் பார்வையாலே கழுவிடு.....!''

''தேங்க்ஸ் பாஸ்!''

''எதுக்கு?''

''லேப் டாப் பார்க்கிற மாதிரியான கஷ்டமான வேலையையெல்லாம் நீங்க எடுத்துகிட்டு எனக்கு இந்த வீட்டை அங்குலம் அங்குலமாய் சோதனை போடற சுலபமான வேலையைக் குடுத்ததுக்காக!''

''எல்லாம் உன் மேல இருக்கிற பிரியத்தினால்தான். போய் வேலையைப் பாருடா..! டி.ஜி.பி. சௌத்ரி இன்னும் அரைமணி நேரத்துக்குள்ளே எனக்கு போன் பண்ணுவார். அப்ப நாம அவர் சந்தோஷப் படற மாதிரி ஏதாவது சொல்லியாகணும். நாளைக் கழிச்சு மறுநாள் நியூ இயர். சந்தோஷமாய் கொண்டாட வேண்டாமா?''

விவேக் சொல்லிவிட்டு லேப்-டாப்பை பார்க்க

ஆரம்பித்துவிட விஷ்ணு அடுத்த அறையை நோக்கிப் போனான்.

பத்து நிமிஷத்துக்குள் திரும்பி வந்தான்.

விவேக் லேப்-டாப்பிலிருந்து தலையை உயர்த்தாமல் கேட்டான். ''என்ன விஷ்ணு?''

''பாஸ்! நம்ம கேஸுக்கு உபயோகப்படற மாதிரி எதுவும் கிடைக்கலை. ஒரு டயரியும், ஒரு அழைப்பிதழும் கிடைச்சுது. டயரியின் முதல் பக்கத்துல ஒரு கவிதை மாதிரியான வாசகம் இருந்தது. அதைத்தவிர டயரியோட எல்லாப் பக்கங்களும் காலி.''

''கவிதையைப்படி!''

*''வாழ்க்கையில் சிலரை மறக்க*
*முடியாது.*
*சிலரைப் பிரிய முடியாது.*
*மறக்காமல் நீங்கள்*
*இருந்தால்*
*பிரியாமல் நான் இருப்பேன்!''*

*-மதுலிகா-*

''இது நிச்சயமாய் காதல்தான்! அழைப்பிதழ்ன்னு சொன்னியே... அது என்ன?''

''நீங்களே பாருங்க பாஸ். மூணு மாசத்துக்கு முந்தின பழைய அழைப்பிதழ்.''

விவேக் வாங்கிப் பார்த்தான். அழைப்பிதழ் தமிழ் மற்றும் இந்தியில் இருந்தது.

*மாற்றுத் திறனாளிகளுக்கான*
*மறுவாழ்வு முகாம்.*
*முகாமை ஆரம்பித்து வைப்பவர்: சூர்ய*
*தேஜாஸ் அவர்கள்*

*நாள்: செப்டம்பர் - 17. 2013*

*இடம்: நல்வாழ்வு சங்கம் - மாதுங்கா.*

*மாற்றுத் திறனாளிகள் மறுவாழ்வு பெற அன்புடன் அழைக்கிறோம்.*

விவேக் அந்த அழைப்பிதழை முழுமையாய் படித்துப் பார்த்துவிட்டு விஷ்ணுவிடமே கொடுத்தான். ''இது உன்கிட்டேயே இருக்கட்டும்!''

''லேப்-டாப்ல ஏதாவது மாட்டிச்சா பாஸ்?''

''ப்ரவுஸிங் ஹிஸ்டரியை சர்ச் பண்ணிப் பார்த்ததுல ரெண்டு விஷயம் உறுத்தலாயிருக்கு

விஷ்ணு.''

''அந்த உறுத்தலை எனக்கும் கொஞ்சம் ஊட்டுங்க பாஸ்.''

''முதல் உறுத்தல் வெனிசுலா.''

''வெனிசுலா ஒரு நாடாச்சே....?''

''எஸ்...... அந்த நாட்டைப்பற்றி தெரிஞ்சுக்கிறதுக்காக மதுலிகா நிறைய தடவை அந்த வெப்சைட்டுக்குள்ளே போயிருக்கா. அதுல சேகரம் பண்ணின பல விஷயங்களை புக் மார்க் பண்ணியிருக்கா..... அந்த நாட்டு மேல அவளுக்கு அப்படி என்ன ஒரு இண்ட்ரஸ்ட்ன்னு தெரியலை.''

''சரி... ரெண்டாவது உறுத்தல்?''

''மைக்ரோ-ப்ராஸஸர்ஸ்''

''புரியலையே!''

''எனக்கும்தான்.....''

''உங்களுக்கும் அது புரியலைங்கும்போது எனக்கு கொஞ்சம் சந்தோஷமாய் இருக்கு பாஸ்...''

''ஆனா... எப்படியும் இன்னும் ஒரு மணி நேரத்துக்குள்ளே அந்த மைக்ரோ-ப்ராஸஸர்ஸ் என்னான்னு கண்டுபிடுச்சுடுவேன்......''

கதவருகே நடைச் சத்தம் கேட்டது.

இருவரும் திரும்பினார்கள்

கான்ஸ்டபிள் நின்றிருந்தார். இந்தியில் சொன்னார்.

''ஸாப்... டி.ஜி.பி. வர்றார்.''

''என்ன பாஸ்! பெரியவர் இங்கேயே வர்றார்?''

''ஒரு ஆர்வம்தான்.....! ரொம்ப நாளைக்கு இந்த கேஸை திரை மறைவில் இன்வெஸ்டிகேட் பண்ணிட்டிருக்க முடியாது. இன்னிக்கு டிசம்பர் 29. ரெண்டு நாள்ல 2014 பொறந்துடும். அதுக்குள்ளே சரண் அத்வாலேவின் கொலைக்கான காரணம், கொலையாளி யார் என்கிற விபரம் உள்துறை அமைச்சகத்துக்கு தெரியப்படுத்தணும்! இப்ப நமக்கு கிடைச்சு இருக்கிற மிகப் பெரிய ஹோல்டிங் மதுலிகா. இவ மூலமாய்த்தான் எல்லா உண்மைகளும் வெளியே வந்தாகணும்.....!''

விவேக் சொல்லிக் கொண்டிருக்கும் போதே டி.ஜி.பி. சௌத்ரி உள்ளே வந்தார். இருவரும் அவர்க்கு உத்யோகபூர்வமான சல்யூட்டைச்

கொடுத்துவிட்டு தளர்ந்தார்கள்.

சௌத்ரி கேட்டார்.

"மிஸ்டர் விவேக்! டிட் யூ கெட் எனி யூஸ்ஃபுல் க்ளு?"

"இரண்டு விஷயங்கள் கிடைத்து இருக்கிறது ஸார். ஆனால் அவைகள் இந்த கேஸில் எந்த அளவுக்கு பயன்படும் என்று தெரியவில்லை."

"இட்ஸ் ஓ.கே. அதை பிறகு பார்ப்போம். இப்போது நான் ஒரு புதுத் தகவலுடன் வந்து இருக்கிறேன்."

"என்ன தகவல் ஸார்...?"

"தன்யா யார் என்று தெரிந்து விட்டது!" சொன்னவர் தனக்குப் பின்னால் கதவருகே நின்றிருந்த இளைஞனைப் பார்த்து கையசைத்தார்.

"வா... அஜய்!"

முப்பது வயதுக்குள் ஒரு ஹிந்திப்பட புதுமுக ஹீரோ தினுசில் இருந்த அந்த இளைஞன் கண்கள் நிறைய கவலையோடும், லேசாய் ரோமம் மண்டிய தாடையோடும் உள்ளே வந்தான். விவேக்கையும் விஷ்ணுவையும் பார்த்து "நமஸ்தே" என்று கம்மிய குரலில் சொல்லி கும்பிட்டான். சௌத்ரி பேச்சைத் தொடர்ந்தார்.

"மிஸ்டர் விவேக்! இந்த இளைஞன் பெயர் அஜய். ஒரு ஐ.டி.கம்பெனியில் சாஃப்ட்வேர் என்ஜினியர். சொந்த ஊர் நாசிக். இங்கே நவி மும்பையில் இருக்கிற ஒரு ஹாஸ்டலில் தங்கி வேலை பார்க்கிறார். கடந்த ஆறுமாசகாலமாய் தன்யாவின் காதலர். தன்யாவை இரண்டு நாட்களாய் பார்க்க முடியாத காரணத்தால் அவளுக்கு ஏதோ ஆபத்து என்று நினைத்து போலீஸ் ஸ்டேஷனில் கம்ப்ளைய்ண்ட் கொடுத்து இருக்கார். விஷயம் என்னுடைய கவனத்துக்கு கொண்டு வரப்பட்டதும் அஜய்யை நான் கூப்பிட்டு விசாரித்தேன். தன்யா ஒரு தமிழ்நாட்டுப் பெண். குர்லாவில் இருக்கிற ஒரு தனியார் கம்பெனியில் ரிசப்னிஷ்ட் உத்யோகம். அம்மா அப்பா கிடையாது. சிறு வயதிலேயே அவங்களை இழந்துட்டதாலே ஒரு அறக்கட்டளை கொடுத்த ஸ்காலர்ஷிஃப் பணத்தில் படித்து டிகிரி வாங்கிய கையோடு இந்த மும்பை குர்லாவில் ஒரு

நல்ல உத்யோகமும் கிடைத்தது. வேலைக்கு சேர்ந்த சிறிது நாட்களிலேயே அஜய்யின் அறிமுகமும் கிடைக்க இரண்டு பேரும் காதலிக்க ஆரம்பித்து கல்யாணம் செய்து கொள்ளும் முடிவில் இருந்திருக்கிறார்கள். அதற்குள் தன்யாவுக்கு இப்படியொரு முடிவு ஏற்பட்டுவிட்டது. தன்யாவின் மரணத்துக்குக் காரணம் மதுலிகாவாய்த்தான் இருக்க வேண்டும் என்பது அஜய்யின் தீர்க்கமான முடிவு.''

விவேக் அந்த அஜய்யை ஏறிட்டான்.

''நீ அப்படியொரு முடிவுக்கு வர என்ன காரணம்?''

அஜய்யின் கண்களில் இப்போது நீர் நிரம்பியிருந்தது. இந்தியும் ஆங்கிலமும் கலந்து பேசினான்.

''ஸார்! தன்யாவுக்கு தனியார் கம்பெனியில் வேலை பார்த்தாலும் டி.வி.யில் காம்பியரிங் செய்ய நிரம்பவே ஆசை. மதுலிகாவை ஒரு டி.வி.நிகழ்ச்சியில் பார்த்து தன்னுடைய ஆசையை சொல்லியிருக்கிறாள். மதுலிகாவும் 'வாய்ப்பு வரும்போது உன்னைப் பயன்படுத்திக் கொள்கிறேன்' என்று வாக்குறுதி கொடுத்து இருக்கிறாள்.''

''மதுலிகாவை நீ நேரில் பார்த்து இருக்கிறாயா?''

''ம்... ஒருதடவை ஜுஹு பீச்சில் நானும் தன்யாவும் பேசிக் கொண்டிருந்தபோது மதுலிகா அங்கே வந்தாள். தன்யா அவளை எனக்கு அறிமுகப்படுத்தி வைத்தாள். நான் மதுலிகாவைப் பார்த்த முதல் பார்வையிலேயே எனக்கு அவளைப் பிடிக்கவில்லை. அவள் அவ்வளவு நல்ல பெண்ணில்லை என்பது பார்த்த மாத்திரத்திலேயே எனக்குப் புரிந்தது. அதற்குப் பிறகு நான் தன்யாவிடம் பேசும் போதெல்லாம் 'அவளுடைய தொடர்பை விட்டுவிடு' என்று எச்சரிக்கை செய்தேன். தன்யா என்னுடைய எச்சரிக்கைகளை சீரியஸாகவே எடுத்துக் கொள்ளவில்லை. ஆனால் இரண்டுவார காலத்துக்கு முன் தன்யாவும் நானும் ஒரு ரெஸ்டாரெண்டில் உட்கார்ந்து பேசிக் கொண்டு இருந்த போது தன்யா மூடு அவுட்டான நிலையில்

இருந்தாள். நான் காரணம் கேட்ட போது 'அஜய்! நீ சொன்னது சரிதான்! மதுலிகாவின் சில நடவடிக்கைகள் சந்தேகத்துக்கு இடமளிப்பதாக உள்ளது. நேற்றைக்கு மதுலிகாவைப் பார்ப்பதற்காக அவளுடைய வீட்டுக்குப் போன போது அவள் செல்போனில் யாருடனோ பேசிக் கொண்டிருந்தாள். எல்லாமே சங்கேத வார்த்தைகள். எனக்கு எதுவும் புரியவில்லை. ஆனால் அவள் சொன்ன சில எண்களில் ஏதோ விபரீதம் இருக்கிறது என்கிற உண்மையைப் புரிந்து கொண்டேன்.' என்று சொல்லிவிட்டு அந்த எண்களை தன்யா ஒரு தாளில் எழுதிக்காட்டினாள்.''

விவேக் கேட்டான்.

''அந்த எண்கள் எதுவென்று... உனக்கு நினைவு இருக்கிறதா?''

''இருக்கிறது.''

''சொல்... அல்லது எழுதிக் காட்டு!''

அஜய் ஒரு துண்டு பேப்பரில் எழுதிக் காட்டினான்.

311-22-013

''இந்த எண்களில் என்ன விபரீதம் இருப்பதாய் தன்யா உன்னிடம் சொன்னாள்?''

''அவளுக்கே அது தெரியவில்லை. போலீஸுக்கு இந்த விஷயத்தைக் கொண்டுபோய்விடலாம் என்று நான் சொன்ன போது தன்யா பயப்பட்டாள். 'மதுலிகா என்னவோ செய்து கொண்டு போகட்டும்' என்று சொன்ன தன்யா இனிமேல் அவளுடனான தொடர்பை துண்டித்துக்கொள்ளப் போவதாக என்னிடம் சொன்னாள். ஆனால் மதுலிகாவுக்கு ஏதோ ஒரு வகையில் சந்தேகம் ஏற்பட்டுவிட தன்யாவை கண்காணிக்க மூன்று ஆட்களைப் போட்டிருக்கிறாள். அதுபற்றி ஒன்றும் தெரியாத தன்யா நான்கு நாட்களுக்கு முன்னால் கேட் வே ஆஃப் இண்டியாவில் உங்களைப் பார்த்து இருக்கிறாள். உங்கள் மேலும் உங்களுடைய திறமை மேலும் அபார நம்பிக்கை கொண்ட தன்யா உங்களிடம் மதுலிகாவைப்பற்றியும், அவளுடைய நிழல்தனமான நடவடிக்கைகள் பற்றியும் சொல்ல





ஆசைப்பட்டு இருக்கிறாள். நீங்கள் உண்மையிலேயே க்ரைம்ப்ராஞ்ச் விவேக்தானா இல்லை அவரைப் போன்ற தோற்றத்தில் உள்ள வேறு யாராவது ஒருவரா என்ற சந்தேகத்தைத் தீர்த்துக் கொள்ள ஒரு பாப் கார்ன் பெண்ணிடம் கடிதம் கொடுத்து விட்டு இருக்கிறாள். நீங்கள் க்ரைம்ப்ராஞ்ச் ஆபீஸர் விவேக்தான் என்று உறுதியானதும் விலே-பார்லேவில் இருக்கிற ரெஸ்டாரெண்ட்டுக்கு மறுநாள் மாலை ஏழுமணிக்கு வரச் சொல்லியிருக்கிறாள். நீங்களும் அங்கே போனீர்கள். ஆனால் நீங்கள் இரண்டு பேரும் ரெஸ்டாரெண்டில் வைத்தே கடத்தப் பட்டீர்கள்.''

''இதையெல்லாம் உனக்கு யார் சொன்னார்கள்?''

''நான்தான் சொன்னேன்'' என்றார் டி.ஜி.பி. ''இதுவரையிலும் நடந்த எல்லா விஷயங்களையும் அஜய்யிடம் சொன்னால்தான் தன்யா அஜய்யிடம் என்னென்ன விஷயங்களை சொல்லியிருக்கிறாள் என்பது நமக்கு தெரியவரும் மிஸ்டர் விவேக்.''

விவேக் ஆமோதிப்பாய் தலையசைத்துவிட்டு மறுபடியும் அஜய்யை ஏறிட்டான். ''மதுலிகாவின் நிழல்தனமான காரியங்கள் எது எது என்கிற தகவலை தன்யா உன்னிடம் எப்போதாவது சொல்லியிருக்காளா?''

''இல்லை.''

''சரி! சரண் அத்வாலே என்ற பெரிய பணக்காரர் ஒருவர்க்கும் மதுலிகாவுக்கும் தொடர்பு இருந்திருக்கிறது. அதைப் பற்றி உனக்கு ஏதாவது தெரியுமா?''

''தெரியாது ஸார்.''

விவேக் அஜய்யிடம் மேற்கொண்டு விசாரித்துக் கொண்டிருக்கும் போதே டி.ஜி.பி. சௌத்ரியின் செல்போன் மெலிதாய் ரிங்டோனை வெளியிட்டது. அவர் செல்போனை எடுத்து காதுக்குப் பொருத்தினார். மறுமுனையில் போலீஸ் கமிஷனர் பேசினார்.

''ஸார்! ஒரு பத்து நிமிஷத்துக்கு முன்பு உள்துறை செயலாளர் பேசினார்.''

''என்ன விஷயம்?''

''சரண் அத்வாலேவின் மர்டர் பற்றிய

இன்வெஸ்டிகேஷனில் ஏதாவது முன்னேற்றம் உண்டா என்று கேட்டவர் வெனிசுலா நாட்டின் அதிபர் டெல்லி போய்விட்டு மறுபடியும் மும்பை வரும் போது கொடுக்க வேண்டிய பாதுகாப்பு ஏற்பாடுகளைப் பற்றிப் பேசினார்.''

சௌத்ரி டென்ஷனாகி செல்போனில் எரிந்து விழுந்தார்.

''அந்த உள்துறை செயலாளர்க்கு வேறு வேலையே கிடையாது. ஒரு நாளைக்கு இரண்டு தடவையாவது போன் செய்து வெனிசுலா நாட்டின் அதிபர்க்கு செய்யப்பட்டு இருக்கிற பாதுகாப்பு ஏற்பாடுகளைப்பற்றி பேசாவிட்டால் அவர்க்கு தலை வெடித்துவிடும்.''

அஜய்யிடம் விசாரனை நடத்திக் கொண்டிருந்த விவேக் சட்டென்று திரும்பி சௌத்ரியைப் பார்த்தான்.

''ஸ...ஸார்...! இ...இப்ப... எந்த நாட்டோட பேர் சொன்னீங்க...? வெனிசுலாவா?''

''ஆமாம்.''

''வெனிசுலா நாட்டின் அதிபர் மும்பை வருகிறரா?''

''ஆமாம்...! இப்போது டெல்லியில் இருக்கிறார். இரண்டு நாட்களுக்கு முன்பு மும்பை வந்தார். அவரை வரவேற்க நானும் ஏர்போர்ட் போயிருந்தேன். மும்பை விமான நிலையத்தில் இரண்டு மணி நேரம் தங்கிவிட்டு டெல்லி புறப்பட்டுப் போனார். நாளை கழித்து மறுநாள் மும்பை வருகிறார். சர்வதேச மாற்றுத் திறனாளிகள் மாநாட்டில் கலந்து கொண்டு பேசுகிறார். மறுநாள் 2014 புத்தாண்டு விழா ஒன்றில் பங்கேற்றுவிட்டு வெனிசுலா புறப்பட்டுப் போகிறார்.''

''மை குட்னஸ்'' என்றான் விவேக்.

''எனிதிங்க் ராங்?''

''எஸ்...''

''என்ன?''

விவேக் விஷ்ணுவிடம் திரும்பி ''விஷ்ணு... நீ அஜய்யிடம் பேசு. எல்லா விஷயங்களையும் சேகாரம் பண்ணு. நான் ஒரு மணி நேரத்துல வந்துடறேன்'' என்றான்.

விஷ்ணு குழப்பத்தோடு தலையாட்ட, விவேக் சௌத்ரியை ஏறிட்டான்.

"ஸார்! உங்க ஆபீஸுக்குப் போகலாமா?"

இந்த பூமி உருண்டையில் 75 சதவீத பரப்பைக் கடல்கள் ஆக்ரமித்துக் கொண்டு இருக்கின்றன. ஒரு லட்சம் ஆண்டுகளுக்கு முன்பு 50 சதவீத பரப்பளவே இருந்த கடல்கள் படிப்படியாய் தன் பரப்பளவை அதிகரித்துக் கொண்டது. இன்னும் ஒரு லட்சம் ஆண்டுகள் போனால் மொத்த பூமி உருண்டையும் கடல் நீரால் நிரம்பி ஒரு நீர்க்கோளமாக மாறிவிடும் என்று கணித்துள்ளார்கள் புவியியல் வல்லுநர்கள். அப்போது வாழும் மனிதர்கள் கடல்களுக்கு நடுவே மிதக்கும் வீடுகளில் வாழ்ந்து கொண்டு இருப்பார்கள் என்றும் அந்த கணிப்பு சொல்கிறது.

## 14

டி.ஜி.பி. அலுவலகம். தனியறை.

சௌத்ரியும், விவேக்கும் எதிரெதிரே உட்கார்ந்திருந்தார்கள். மேஜையின் மேல் வைக்கப்பட்டிருந்த பீங்கான் கோப்பைகளில் காப்பி உஷ்ணமாய் மூச்சு விட்டுக் கொண்டிருந்தது.

"சொல்லுங்கள் விவேக்..... என்ன பிரச்னை?"

"ஸார்! என்னுடைய கணிப்பு ஒருவேளை தவறாகவும் இருக்கலாம். ஒருவேளை துரதிர்ஷ்டவசமாக உண்மையாகவும் இருக்கலாம்."

"என்ன சொல்ல வருகிறீர்கள்.?"

"சரண் அத்வாலே, மதுலிகா, வெனிசுலா, மாற்றுத்திறனாளிகள்- இந்த நான்கு வார்த்தைகளுக்குமிடையில் ஒரு விபரீதம் ஒளிந்து கொண்டு இருப்பதாக உணர்கிறேன்."

"என்ன விபரீதம்?"

"அது எனக்குத் தெரியாது. இப்போது நாம் இருவரும் பேசிப் பார்ப்போம். அப்படி பேசும் போது அந்த விபரீதம் என்னவாக இருக்கக்கூடும் என்பது

நமக்கு ஒருவேளை தெரிய வரலாம்.''

''இட்ஸ் ஓ.கே... உங்க கெஸ் ஒர்க் என்ன?''

''ஸார்! ஒரு மணி நேரத்துக்கு முன்பு மதுலிகாவின் வீட்டில் நான் சோதனை நடத்திய போது லாக்-அவுட் செய்யப்படாத மதுலிகாவின் லாப்-டாப் கம்ப்யூட்டர் ஒன்று என்னுடைய பார்வைக்குக் கிடைத்தது. அந்த லேப்-டாப்பை செயல்பாட்டுக்கு கொண்டு வந்து பார்த்தபோது ஒரு விஷயம் எனக்கு ஆச்சரியத்தைக் கொடுத்தது. அதாவது கடந்த சில நாட்களாக மதுலிகா வெனிசுலா நாடு சம்பந்தப்பட்ட வெப்-சைட்டுகளைத் தேடிப் போயிருக்கிறாள். அந்த நாட்டின் அதிபர் ஜான் ஜெர்ராட் பற்றிய செய்திகளை 'புக் மார்க்' செய்து படித்து இருக்கிறாள்.''

டி.ஜி.பி. சௌத்ரி நிமிர்ந்து உட்கார்ந்தார்.

''மதுலிகாவுக்கு வெனிசுலா நாட்டின் மேலும் அதன் அதிபர் மேலும் அப்படி என்ன ஒரு ஆழ்ந்த ஈடுபாடு?''

''தெரியவில்லை...'' என்று சொன்ன விவேக் தன் கையில் வைத்து இருந்த அந்தப் பழைய அழைப்பிதழை டி.ஜி.பி.யிடம் நீட்டினான்.

''இதைப் படியுங்கள் ஸார்.''

சௌத்ரி படித்தார்.

*மாற்றுத் திறனாளிகளுக்கான மறுவாழ்வு முகாம்*

*முகாமை ஆரம்பித்து வைப்பவர்: சூர்ய தேஜாஸ் அவர்கள்*

*நாள்: செப்டம்பர் 17 2013*

*இடம்: நல்வாழ்வு சங்கம். மாதுங்கா.*

*மாற்றுத்திறனாளிகள் மறுவாழ்வு பெற அன்புடன் அழைக்கின்றோம்.*

சௌத்ரி அந்த அழைப்பிதழைப் படித்துவிட்டு குழப்ப முகத்தோடு நிமிர்ந்தார். ''விவேக்! இது மூன்று மாதத்துக்கு முந்தின ஒரு பழைய அழைப்பிதழ். இதற்கும் இப்போதுள்ள பிரசனைக்கும் என்ன சம்பந்தம்?''

''சம்பந்தம் இருக்கிறது ஸார். மதுலிகாவுக்கு இந்த அழைப்பிதழ் அனுப்பப்பட்டு இருக்கிறது.

மாற்றுத் திறனாளிகளின் விஷயத்தில் மதுலிகாவுக்கு ஏதோ ஒரு விருப்பம் இருந்து இருக்கிறது.''

''அதனால் என்ன?''

''இதில் ஒரு உறுத்தல் இருக்கிறது ஸார்.''

''என்ன உறுத்தல்?''

''வெனிசுலா அதிபர் ஜான் ஜெர்ராட் நாளை கழித்து மறுநாள் மும்பையில் சர்வதேச மாற்றுத் திறனாளிகளின் மாநாட்டில் கலந்து கொண்டு பேசுகிறார் இல்லையா?''

''ஆமாம்.''

''ஒரு சாதாரண டி.வி. காம்பியரிங் பெண்ணுக்கும் வெனிசுலா நாட்டு அதிபர்க்கும் இடையில் கண்ணுக்குத் தெரியாத ஒரு தொடர்பு இருக்கிறது. இதற்கு சாட்சியாக இருப்பது மதுலிகாவின் கம்ப்யூட்டர். அவள் தன் கம்ப்யூட்டரில் அதிகமாய்ப் பார்த்தது வெனிசுலா நாட்டைப் பற்றியும், அந்த நாட்டின் அதிபரான ஜான் ஜெர்ராட்டைப் பற்றியும்தான்.

''எனக்கு ஏதோ புரிகிற மாதிரி இருக்கிறது.''

''என்க்கு புரிந்துவிட்டது ஸார் - நாளை கழித்து மறுநாள் மும்பை வரும் வெனிசுலா நாட்டு அதிபர் ஜான் ஜெர்ராட்டுக்கு ஏதோ ஆபத்து காத்து இருக்கிறது. அந்த விழா சம்பந்தமான அழைப்பிதழ் உங்களிடம் இருக்கிறதா?''

''இருக்கிறது. அந்த விழாவில் உள்துறை அமைச்சர் ஜெய்பால்சர்மாவும், ஐ.ஏ.எஸ் அதிகாரிகளும், ஐ.பி.எஸ் அதிகாரிகளும் கலந்து கொள்கிறார்கள்.'' சொன்ன சௌத்ரி தம் மேஜையின் இழுப்பறையைத் திறந்து நீள் செவ்வக அளவில் இருந்த அந்த அழைப்பிதழை எடுத்து விவேக்கிடம் கொடுத்தார். ஐந்து பக்கங்கள் கொண்ட கனமான அழைப்பிதழ்.

விவேக் அழைப்பிதழைப் பிரித்தான். ஆர்ட் பேப்பரில் எழுத்துக்கள் முதல் பக்கத்தில் பளபளத்தன.

INTERNATIONAL DISABLED PERSONS MEET.

THOUSANDS OF
TINY MIRACLES.
WE CAN DO.
VENWZUELA PRESIDENT
Mr.JHON JERROT SPEAKS

ABOUT
OUR UNITY.
ALL ARE INVITED.

விவேக் அழைப்பிதழின் மற்ற பக்கங்களைப் புரட்டிப் பார்த்துவிட்டு ஒரு பெருமூச்சோடு நிமிர்ந்தான் சௌத்ரியிடம் கேட்டான்.

''ஸார்! இப்படியொரு மாற்றுத்திறனாளிகள் மாநாடு வருடா வருடம் நம் இந்தியாவில் நடைபெறுகிறதா?''

''நம் இந்தியாவில் நடப்பது இப்போதுதான் முதல்தடவை. வருடத்துக்கு ஒரு முறை ஏதாவது ஒரு நாட்டில் இது மாதிரியான ஒரு மாநாடு வெனிசுலா நாட்டு அதிபரால் நடத்தப்படுகிறது.''

''அப்படி நடத்தப்படுவதற்கு ஏதாவது காரணம் உண்டா?''

''உண்டு! வெனிசுலா நாட்டு அதிபர் 'ஜான் ஜெர்ராட்' ஒரு கால் ஊனத்தோடு பிறந்தவர். ஊனத்தைக் குறையாக எண்ணாமல் கியூபா பல்கலைக்கழகத்தில் படித்து பல பட்டங்கள் பெற்று அரசியல் களம் புகுந்து வெற்றிகண்டவர். தொடர்ந்து ஐந்து முறை அதிபர் தேர்தலில் வெற்றி பெற்றவர்.''

''க்ளீன் போல்ட்'' விவேக் சிரித்தான்.

''வாட் டூ யூ மீன் மிஸ்டர் விவேக்?''

''ஸார்! நீங்கள் சொன்ன கடைசி வாக்கியம் போதும். 'ஜான் ஜெர்ராட்'டுக்கு அரசியல் ரீதியான எதிரிகள் அவருடைய உயிர்க்கு ஆபத்து விளைவிக்க மும்பையில் நடக்க இருக்கும் மாநாட்டைத் தேர்ந்து எடுத்திருக்கிறார்கள்.''

சௌத்ரி அதிர்ந்து போனவராய் எழுந்தார். ''விவேக்! நீங்கள் சொல்வது உண்மையாய் இருக்கும் பட்சத்தில் நான் உடனடியாய் அதிரடியாய் சில நடவடிக்கைகளை எடுக்க வேண்டியுள்ளது.'' பேசிக் கொண்டே செல்போனை கையில் எடுத்தார்.





"ஸார்! யார்க்கு போன் செய்யப் போகிறீர்கள்?"

"உள்துறை அமைச்சர்க்கு."

"வேண்டாம்"

"விவேக்! இது மிகப் பெரிய பிரச்னை. ஒரு வெளிநாட்டு அதிபரின் உயிர்க்கு இந்தியாவில் ஆபத்து என்றால் அதை நான் உள்துறை அமைச்சகத்துக்கு தெரியப்படுத்த வேண்டும்."

" யூ ஆர் கரெக்ட் ஸார்...! ஆனால் இந்தத் திட்டத்துக்குப் பின்னால் இருக்கும் கறுப்பு ஆடுகளை நாம் பிடிக்க வேண்டுமென்றால் இரண்டு நாட்கள் பொறுமையாக இருக்க வேண்டும். நமக்கு விஷயம் தெரிந்துவிட்டது என்று எதிரிகளுக்குத் தெரியக் கூடாது."

"ஏதாவது அசம்பாவிதம் நடந்துவிட்டால்?"

"அப்படி நடப்பதற்கு முன்னால் தடுத்துவிடலாம்."

"எப்படி...?"

"இன்று இரவு பதினோரு மணிக்கு நீங்களும் நானும் 'ஓட்டோ ப்ளாக்' அமைப்பைச் சேர்ந்த ஒரு நபரைப் பார்க்கப் போகிறோம்."

"ஓட்டோ ப்ளாக்...! அப்படி யென்றால்?"

"அது மாற்றுத் திறனாளிகளுக்கான நல்வாழ்வு அமைப்பு. உலக எலும்பியல் மற்றும் புனர்வாழ்வு தொழில் நுட்பம் சம்பந்தப்பட்டது. இந்த அமைப்பில் உறுப்பினராக உள்ள நபரைத்தான் பார்க்கப்போகிறோம். அவர் ஒரு டாக்டர். ஆஸ்டியாலிஜிஸ்ட். பெயர் ராம் தேவ் வர்மா. அவரால் நமக்கு உதவி செய்ய முடியும்."

"எப்படி?"

விவேக் குரலைத் தாழ்த்திக் கொண்டு சொல்ல ஆரம்பித்தான்.

கடல் நீரில் தங்கம் இருக்கிறது. ஆனால் அதைப் பிரித்து எடுக்க ஆகும் செலவு இரண்டு மடங்கு. கடலிலிருந்து மின்சாரம் தயாரிக்க முடியும். ஆனால் மூன்று மடங்கு செலவு செய்ய வேண்டும். கடல் நீரைக் குடிநீராக மாற்ற முடியும். ஆனால் அதற்கு ஆகும் செலவு நான்கு

மட்டங்காக இருக்கும். ஆனால் கடல் நமக்கு இலவசமாக ஒன்றைக் கொடுத்துக் கொண்டிருக்கிறது. அதுதான் மழை.

15

மும்பையின் தானே ஏரியாவின் மையப்பகுதியில் இருந்த ஸ்டேடியத்தின் உள் அரங்கம் வெளிச்சத்தில் நிரம்பியிருந்தது.

டிசம்பர் 31. மாலை ஆறுமணி.

ஸ்டேடியத்தின் முகப்பிலும் உள்ளேயும் ஃப்ளக்ஸ் போர்டுகள் வண்ணமயமாய் வார்த்தைகளை இறைத்து- பார்த்துக் கொண்டிருந்த மாற்றுத்திறனாளிகளுக்கு மகிழ்ச்சியையும் தைரியத்தையும் கொடுத்துக் கொண்டிருந்தது.

மப்டியில் இருந்த டி.ஜி.பி சௌத்ரி, விவேக், விஷ்ணு மூன்று பேரும் வாசலில் ஒரு ஓரமாய் நின்றிருந்தார்கள்.

''பாஸ்!''

'' ம் ....''

''ஸ்டேடியத்துக்குள்ளே ஒரு ரெண்டாயிரம் பேராவது இருப்பாங்க போலிருக்கு.''

'' இது சர்வதேச அளவில் நடத்துப்படுகிற டிஸ்ஏபிள்ட் பர்சன்ஸ் மீட். எத்தனை வி.ஐ.பி.க்கள் பாரு...''

''வெனிசுலா அதிபர் ஜான் ஜெர்ராட் சரியாய் ஆறரைமணிக்கு வந்துருவாரா பாஸ்.?''

''வந்துடுவார்.''

விஷ்ணு குரலைத் தாழ்த்தினான்.

''உயிரோடு திரும்பிப் போவாரா பாஸ்?''

விவேக் முறைத்தான்.

''ஸாரி பாஸ்... இங்கே ஏதோ நடக்கப் போகுதுன்னு என்னோட மனசுக்குள்ளே ஒரு குரல்! ரெண்டுதடவை டாய்லட் பக்கம் போயிட்டு வந்துட்டேன். ஒண்ணும் நடக்காதே?''

'' உன்னை ஹோட்டல் ரூம்லேயே விட்டுட்டு வந்திருக்கணும்.''

யாரிடமோ பேசிக்கொண்டிருந்த டி.ஜி.பி.தன்

காதில் இருந்த செல்போனை எடுத்துவிட்டு திரும்பினார்.

''விவேக்! வெனிசுலா அதிபர் ஹோட்டலிலிருந்து புறப்பட்டுவிட்டார். இங்கே சரியாய் ஆறரை மணிக்கு ரீச் ஆயிடுவார்.''

''ஓ.கே! நம்முடைய வேலையை ஆரம்பித்து விடலாமா ஸார்?''

''ம்.... இப்போது ஆரம்பித்தால் சரியாய் இருக்கும்.''

''என்ன பாஸ் பண்ணப் போறீங்க? இங்கே என்னோட பங்கு என்ன?''

''பேசாமே பின்னாடி வாடா.''

''எனக்கு பொறுப்பான ஒரு நல்ல வேலையைக் கொடுத்ததுக்கு ரொம்பவும் நன்றி பாஸ்.''

மூன்று பேரும் நடந்தார்கள்- மேடையின் பின்புறம் நோக்கி. மின்சார வெளிச்சம் அங்கே தவறியிருந்தது.

''மிஸ்டர் விவேக், எல்லாம் நல்லபடியாய் முடியுமா? வெனிசுலா அதிபர்க்கு எந்த ஒரு அசம்பாவிதமும் நடந்துவிடக்கூடாது.''

''நடக்காது ஸார்.''

''நீங்கள் என்னதான் தைரியம் சொன்னாலும் அடி மனதில் ஒரு கலக்கம்.'' சௌத்ரி சொல்லிக் கொண்டிருக்கும் போதே விவேக்கின் செல்போன் வைப்ரேஷனில் கூப்பிட்டது. எடுத்து பேசினான். மறுமுனையில் ராம்தேவ் வர்மா.

'' விவேக்! மேடையின் பின்புறம் இருக்கிற ஒப்பனை அறை அருகே உங்களுக்காக காத்துக் கொண்டு இருக்கிறேன்.''

''நாங்கள் இப்போது அங்கேதான் வந்து கொண்டு இருக்கிறோம்...''

'' நான் உங்களைப் பார்த்துவிட்டேன்.''

சற்றுத் தொலைவில் ஒரு சுவர் அருகே அரையிருட்டில் நின்றிருந்த ராம்தேவ் வர்மா வெளிப்பட்டார். வழுக்கைத் தலை மின்னியது.

''நம் அதிரடி ஆட்டத்தை ஆரம்பித்து விடலாமா?''

'' இது சரியான நேரம். இனியும் தாமதிக்கக் கூடாது!''

நான்கு பேரும் நிதான நடையில் ஒப்பனை அறையை நெருங்கி, சாத்தியிருந்த கதவின் மீது கையை வைத்தார்கள். கதவு திறந்து கொண்டது.

அறை வெளிச்சமாய் ஒரு ஹால் மாதிரி தெரிந்தது. ஐம்பதுக்கும் மேற்பட்ட குழந்தைகள் வெண்ணிற கவுன்களை அணிந்து இடுப்பில் ஒட்டிய இறக்கைகளோடு தேவதைகளாய் மாறியிருந்தார்கள். மாற்றுத் திறனாளி குழந்தைகள். பத்து வயதிலிருந்து பன்னிரண்டு வயதுக்குள் இருந்தார்கள்.

குழந்தைகளுக்கு ஒப்பனை செய்து கொண்டிருந்த இரண்டு பெண்கள் ஒப்பனையை நிறுத்திவிட்டு உள்ளே நுழைந்த நான்கு பேரையும் கொஞ்சம் கலக்கமாய்ப் பார்த்தார்கள்.

''யார் வேணும்?''

''சூர்ய தேஜாஸ் எங்கே?''

ஹாலின் மூலையில் இருந்த ஒரு சிறிய அறையைக் காட்டினாள் அந்தப் பெண்.

விவேக் முதல் ஆளாய் அந்த அறையை நோக்கி நடந்தான். கதவை நெருங்கி தட்டினான். குரல் கொடுத்தான்.

''மே... ஐ... கம்... இன்?''

உள்ளேயிருந்து குரல் கேட்டது.

கனமான குரல். ''ப்ளீஸ்... கெட்... இன்.''

நான்கு பேரும் உள்ளே நுழைந்தார்கள். லேப்-டாப் கம்ப்யூட்டரில் எதையோ பார்த்துக் கொண்டிருந்த சூர்ய தேஜாஸ் பார்வைக்குக் கிடைத்தார். அறுபது வயது இருக்கலாம். பெயர்க்கு ஏற்றமாதிரி மஞ்சளும் சிவப்பும் கலந்த நிறத்தில் பிரகாசம் காட்டினார். அடர்த்தி குறைந்த நீளமான நரை முடிகளை நேர்த்தியாய் சீவியிருந்தார். நெற்றியில் ஸ்ரீ சூர்ணம் ஒரு மெல்லிய சிவப்பு கோடாய் தெரிந்தது.

கம்ப்யூட்டரை அணைத்துவிட்டு நான்கு பேரையும் ஒரு குழப்பப் பார்வை பார்த்துவிட்டு ''எஸ்'' என்றார் சூர்ய தேஜாஸ். விவேக் அவரை ஏறிட்டான்.

''உங்களோடு பேச வேண்டும். பேச்சு வார்த்தையை இந்தியில் வைத்துக்கொள்ளலாமா...

இல்லை ஆங்கிலத்தில் வைத்துக் கொள்ளலாமா?"

"ஆங்கிலம்" என்று சொன்னவர் "நீங்கள் யார்?" என்று கேட்டார்.

"நாங்கள் மூன்று பேரும் போலீஸ் டிபார்ட்மெண்ட். இவர் ஆஸ்டியாலஜிஸ்ட் ராம் தேவ் வர்மா."

"என்ன வேண்டும் உங்களுக்கு ?"

"உட்கார்ந்து பேசலாமா?"

"ப்ளீஸ்."

நான்கு பேரும் உட்கார்ந்தார்கள். சூர்ய தேஜாஸ் தான் அணிந்திருந்த மூக்குக் கண்ணாடியைக் கழற்றி மேஜையின் மீது பத்திரமாய் வைத்துவிட்டு "ம்... சொல்லுங்கள்! என்ன விஷயம்?" என்றார்.

"மாற்றுத் திறனாளி குழந்தைகளுக்காக ஒரு காப்பகம் அமைத்து அவர்களுடைய எதிர்கால வாழ்க்கையை ஒளிமயமாக்க நீங்கள் எடுத்துக் கொள்ளும் முயற்சிகள் உண்மையிலேயே பாராட்டுக்குரியது."

"நன்றி! இப்படியொரு பாராட்டை சொல்வதற்காக மட்டும் இங்கே வந்து இருக்க மாட்டீர்கள் என்று நினைக்கிறேன்."

"சரியாய் கணித்துவிட்டீர்கள். எங்களுக்கு ஏற்பட்டிருக்கும் ஒரு சந்தேகத்தை தெளிவுபடுத்திக் கொள்ளவே உங்களைப் பார்க்க வந்தோம்."

"சொல்லுங்கள்."

"வெனிசுலா நாட்டின் அதிபர் கலந்து கொள்ளும் இந்த சர்வதேச மாற்றுத் திறனாளிகள் மாநாட்டில் 'பூமியின் தேவதைகள்' என்ற நடன நிகழ்ச்சியை நடத்த ஏற்பாடு செய்தது நீங்கள்தானே?"

"ஆமாம்."

"மொத்தம் எத்தனை குழந்தைகள் அதில் கலந்து கொள்கிறார்கள்?"

"ஐம்பது குழந்தைகள்."

"அந்தக் குழந்தைகள் எல்லோருமே ஊனமுற்ற குழந்தைகள்- அதாவது ஒரு கை அல்லது ஒரு கால் இழந்தவர்கள். இல்லையா?"

"ஆமாம்...."

"ஒரு கால், ஒரு கை இல்லாமல் அவர்கள் எப்படி நடனமாடுவார்கள்?"

"இது என்ன கேள்வி...? செயற்கை கை, கால் பொருத்திக் கொண்டு நடனமாடுவார்கள். அதற்கான பயிற்சி அவர்களுக்கு அளிக்கப்பட்டு இருக்கிறது."

"அந்தக் குழந்தைகளை நாங்கள் பார்க்க வேண்டும்"

"எதற்கு.........?"

"சோதனையிட வேண்டும்."

"என்ன சோதனை...?"

"அந்தக்குழந்தைகளில் யாராவது ஒருவர்க்கு 'மைக்ரோ ப்ராஸஸர்' (MICRO PROCESSOR) என்ற நுண் செயலி பொருத்தப்பட்டு இருக்கலாம் என்று நினைக்கிறோம்."

சூர்ய தேஜாஸின் முகம் அந்தக் கணமே இருண்டது.

"என்ன சொன்னீர்கள்... மைக்ரோ ப்ராஸஸர் என்கிற நுண் செயலியா?"

"ஆமாம்......! அதைப்பற்றி நீங்கள் கேள்விப்பட்டது இல்லையா?"

" இல்லை..."

விவேக், ராம்தேவ் வர்மாவிடம் திரும்பினான். "டாக்டர்! சூர்ய தேஜாஸுக்கு மைக்ரோ ப்ராஸஸர் என்றால் என்னவென்று தெரியவில்லை. சின்னதாய் ஒரு வகுப்பு எடுத்து விடுங்கள்."

ஆஸ்டியாலாஜிஸ்ட் டாக்டர் ராம்தேவ் வர்மா ஒரு சிறிய புன்னகையோடு பேச்சை ஆரம்பித்தார்.

"மிஸ்டர் சூர்ய தேஜாஸ்! மாற்றுத் திறனாளிகளின் எதிர்கால வாழ்க்கை வளமாக இருக்க வேண்டும் என்பதற்காக அயராது பாடுபட்டுக் கொண்டு இருக்கும் உங்களுக்கு மைக்ரோ ப்ராஸஸர் என்கிற நுண் செயலியைப் பற்றி எதுவும் தெரியவில்லை என்றால் எனக்கு வியப்பாக உள்ளது. மாற்றுத் திறனாளிகளின் குறைபாடு உள்ள உறுப்புகள் நல்லவிதமாக செயல்பட புதிதாய் கண்டுபிடிக்கப்பட்ட ஒரு சாதனம்தான் 'மைக்ரோ ப்ராஸஸர்'. இதை செயற்கைக்காலோடு இணைத்துக் கொண்டால் நடப்பதற்கோ, ஓடுவதற்கோ, ஏன் நடனமாடுவதற்கோ கூட சிரமம் இருக்காது."

"அ...அ... அப்படியா?"

"ஆமாம்...! மைக்ரோ ப்ராஸஸர் ஒரு ரோபோ




போல் செயல்படுவதால் மாற்றுத்திறனாளிகளுக்கு சிரமம் குறையும்.''

''நா... நான் இப்போதுதான் கேள்விப்படுகிறேன்.''

விவேக் குறுக்கிட்டான். ''ஆச்சர்யமாய் இருக்கிறது.''

''இதில் என்ன ஆச்சர்யம்?''

''மைக்ரோ ப்ராஸஸர் பற்றி எதுவுமே தெரியாத நீங்கள் 15 நாட்களுக்கு முன்னால் மதுலிகாவிற்கு அவளுடைய இ.மெயிலுக்கு மைக்ரோ ப்ராஸஸர் பற்றிய ஒரு வீடியோ ஆப்ஷனை அனுப்பியிருக்கிறீர்கள். அது எப்படி...?''

சூர்ய தேஜாஸ் நாற்காலியைப் பின்னுக்குத் தள்ளிக் கொண்டு அதிர்ச்சியாய் எழுந்தார்.

''மதுலிகாவின் இ.மெயில் உங்களுக்கு எப்படி...''

''அதையெல்லாம் உங்களுக்கு இப்போது விளக்கிக் கொண்டிருக்க நேரமில்லை. நாங்கள் மாற்றுத்திறனாளி குழந்தைகளின்- அதாவது நடனமாடப் போகும் குழந்தைகளின் செயற்கைக் கால்களைப் பரிசோதித்து பார்க்க வேண்டும்.''

''நோ... '' என்று கத்திய சூர்ய தேஜாஸ் மேஜையின் இழுப்பறையைத் திறந்து எதையோ எடுக்க முயல-

டி.ஜி.பி. சௌத்ரியின் அகலமான உள்ளங்கையில் ஒளிந்திருந்த துப்பாக்கி பாம்பைப் போல் தலையை உயர்த்தியது..

''ஸாரி! இனி நீங்கள் உடம்பை அசைத்தால் தோட்டா உங்கள் உடம்பில் பாயும். அப்படியே உட்காருங்கள்.''

ஒடுங்கிப் போய் உட்கார்ந்தார் சூர்ய தேஜாஸ்.

விவேக் ராம்தேவ் வர்மாவிடம் திரும்பினான்.

''டாக்டர்! வாங்க..... குழந்தைகளை சோதனை பண்ணிட்டு வருவோம்.'' வெளியே வந்தார்கள்.

விஷ்ணு குழந்தைகளை வரிசையாய் நிற்க வைக்க, டாக்டர் ஒவ்வொரு குழந்தையின் அருகே போய் குனிந்து சோதிக்க ஆரம்பித்தார்.

பத்தே நிமிடம்!

இரண்டு குழந்தைகளின் செயற்கைக் கால்களில்

பொருத்தப்பட்டு இருந்த மைக்ரோ ப்ராஸஸர்களை பிரித்து எடுத்த டாக்டர் ராம்தேவ் வர்மா விவேக்கிடம் வந்தார்.

''மிஸ்டர் விவேக்! நீங்கள் சந்தேகப்பட்டது சரிதான். இந்த மைக்ரோ ப்ராஸஸர்களோடு சக்தி வாய்ந்த ஐந்து பட்டன் சைஸ் டைனமைட்டுகள் பொருத்தப்பட்டு இருக்கின்றன. நடனமாடும்போது அதிகப்படியான வெப்பம் உடம்பில் உண்டாகும். அந்த வெப்பத்தின் காரணமாக இந்த டைனமைட்கள் வெடிக்கும். வெனிசுலா அதிபரை தீர்த்துக்கட்ட ரொம்பவும் புத்திசாலித்தனத்தோடு திட்டத்தை தீட்டியிருக்கிறார்கள். ஆனால் நீங்கள் அதை அற்புதமாய் முறியடித்துள்ளீர்கள். யூ ஹேவ் டன் ஏ க்ரேட் ஜாப்.''

விவேக்கின் கையைப் பற்றி குலுக்கினார் டாக்டர் ராம்தேவ் வர்மா.

விஷ்ணு விவேக்கைக் நெருங்கினான்.

'' பாஸ்! வெனிசுலா அதிபர் மேடைக்கு வந்துட்டார். அதோ.... கைதட்டல் சத்தம் கேட்குது!''



**ஹோ**ட்டல் அறை.

''அப்புறம்?'' என்றாள் ரூபலா.

விவேக் பதில் சொல்வதற்குள் விஷ்ணு குறுக்கிட்டான்.

''என்ன நடந்ததுன்னு... நான் சொல்றேன் மேடம்...! போலீஸ் லாட்டிக்கு வேலை குடுக்காமே சூர்ய தேஜாஸ் எல்லா உண்மைகளையும்- மனப்பாடம் பண்ணின ஸ்கூல் பையன் மாதிரி- 'கடகட'ன்னு சொல்லிட்டார். கண் அத்வாலே, மதுலிகா, சூர்ய தேஜாஸ் இந்த மூணுபேரும் வெனிசுலா நாட்டு எதிர்க்கட்சி தலைவரோடு ஒரு ஒப்பந்தம் போட்டுகிட்டு ஆட்சியில் இருக்கிற அதிபர் ஜான் ஜெர்ராட்டை அப்புறப்படுத்தள்ள ஒரு சதித்திட்டம் தீட்டியிருக்காங்க. இதுக்காக பேசப்பட்ட தொகை எவ்வளவு தெரியுமா மேடம்?''

''எவ்வளவு?''

''ஆயிரத்து ஐநூறு கோடி!''

''அம்மாடி...!''

''சொந்த நாட்ல அதிபரைட் போட்டுத்தள்ளினால் மக்கள் பிரச்னை பண்ணலாம் அது ஒரு புரட்சியாகவும் மாறலாம்ன்னு பயப்பட்ட அந்த நாட்டின் எதிர்க்கட்சித் தலைவர் திட்டத்தை இந்தியாவில் அரங்கேற்ற ஏற்பாடு பண்ணியதின் விளைவுதான் இது! திட்டத்தை செயல்படுத்த இன்னமும் இருபது நாள் இருந்த போதுதான் சரண் அத்வாலே, மதுலிகா, சூர்ய தேஜாஸ் மத்தியில் ஒரு பிரச்னை உருவாச்சு.''

''என்ன பிரச்னை?''

''பேசப்பட்ட 1500 கோடி ரூபாயில் பாதித் தொகையை தனக்கு வேணும்ன்னு சரண் அத்வாலே கேட்டிருக்கார். அதை மத்த ரெண்டு பேரும் ஏற்க மறுக்க, வாக்குவாதம் ஏற்பட்டு அது மோதலாய் மாற சூர்ய தேஜாஸ் சரண் அத்வாலேவை வெட்டிக் கொலை பண்ணியிருக்கார். இந்த சம்பவம் நடந்தது சரண் அத்வாலேவின் பங்களாவில். அப்போது பங்களாவில் யாருமில்லை. சரண் அத்வாலே கொலை செய்யப்பட்டதும் அதிர்ச்சி அடைந்த மதுலிகா சூர்ய தேஜாஸை தாக்க முயல அவளையும் தீர்த்துக்கட்டிட்டார். இரண்டு உடம்புகளையும் டிஸ்போஸ் பண்ண தன்னோட ஆட்களுக்கு போன் பண்ணி வரச் சொல்லியிருக்கார் சூர்ய தேஜாஸ். ரெண்டு உடம்புகளை வெளியே கொண்டு போய் டிஸ்போஸ் பண்ணுவது ஒரு பிரச்னையாய் இருக்கும்ன்னு நினைச்சு ரெண்டு பாடியையும் துண்டு போட்டு பங்களாவைச் சுற்றியும் சின்னச் சின்ன குழிகளாய் தோண்டி புதைச்சிருக்காங்க. விடிய விடிய புதைச்சும் முடியாததால மதுலிகாவோட உடம்பின் மீதித்துண்டுகளை கார்ல போட்டுகிட்டு கல்யாணுக்குப் பக்கத்துல கொண்டு போய் டிஸ்போஸ் பண்ணியிருக்காங்க.''

''அடப்பாவிகளா!''

விவேக் குறுக்கிட்டான்.

''அதுக்கப்புறம் சூர்ய தேஜாஸ்ஸே தனியாய் இந்த வெனிசுலா பிரச்னையை டீல்

ண்ணியிருக்கார்... ஆனாலும் மாட்டிகிட்டார்.''

விஷ்ணு சிரித்தான்.

''பாஸ்தான் 'மேன் ஆஃப் த மேட்ச்'. நாளைக்கு ாயந்தரம் தாஜ் ஹோட்டல்ல பாஸ்க்கு ஒரு பாராட்டு விழா. சீஃப் கெஸ்ட் யார் தெரியுமா மேடம்?''

''யாரு?''

''வெனிசுலா அதிபர் ஜான் ஜெர்ராட்.''- சொன்ன விஷ்ணு விவேக்கிடம் திரும்பினான்.

''பாஸ்! இந்த கேஸ்ல இன்னும் ஒரே ஒரு முடிச்சு மட்டும் அவிழாமல் அப்படியே இருக்கு...!''

''என்னது?''

''311-22-013. இந்த எண்களுக்கு என்ன அர்த்தம் பாஸ்?''

''அந்த எண்களைப் பார்த்த அன்னிக்கே நான் ண்டு பிடிச்சுட்டேன். வெனிசுலா அதிபரைத் ர்த்துக்கட்ட நாள் குறிச்சவங்க அந்த எண்களை புவங்களுக்கு மட்டும் புரியும் படியாய் ாத்தியிருக்காங்க! அதாவது...!''

''புரிஞ்சு போச்சு பாஸ்.''

''சொல்லு பார்க்கலாம்''

''31-12-2013''

''அதே! அதே!''

சொல்லிவிட்டு சிரித்தான் விவேக்.